# சி.வை. தாமோதரம் பிள்ளை வாழ்வும் பணியும்

முனைவர் மு. சற்குணவதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# சி.வை. தாமோதரம் பிள்ளை வாழ்வும் பணியும்

முனைவர் மு. சற்குணவதி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

உ.வே.சா அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் : பலர்)

வரிசை எண் : 12

---

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | **Ci.Vai.**Tāmōtarampiḷḷai vāḻvum paṇiyum |
| Author | : | Dr. M. Sargunavadhi<br>Associate Professor<br>Tamil Department<br>Institute of Distance Education<br>University of Madras, Chennai-600 005 |
| General Editor | : | Dr. T. Mahalakshmi<br>Associate Professor<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 654 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | x + 94 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 45 /- (Rupees Forty Five Only) |
| Printed by | : | United Bind Graphics<br>95 (43), Millers Road, Kipauk<br>Chennai - 600 010 |
| Subject | : | Biography and Contribution of C.V. Damodaram Pillai |


---

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

சி.வை. தாமோதரம் பிள்ளை பற்றி எண்ணிறந்த நூல்கள் தமிழ் உலகில் வந்துள்ளன. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் சி.வை. தாமோதரம்பிள்ளை பற்றி அண்மையில் ஒரு நூல் வெளியிட்டுள்ளது. இந் நூல் அதைத் தொடர்ந்து வெளிவரும் அடுத்த நூலாகும். ஆயிரத்து எண்ணூறுகளின் இறுதிப் பகுதி என்பது தமிழ்ப் பதிப்புக் காலமாக விளங்கியது எனில் அது மிகையாகாது. இலங்கைத் தமிழராக இருந்து கிறித்துவ மதத்தில் சில காலம் வாழ்ந்து சைவ சமயம் கண்டவர். தமிழ் இலக்கணம், இலக்கியப் பதிப்பு எனப் பலநிலைகளில் இவரது அழுத்தமான பங்களிப்புகள் தமிழுலகிற்குக் கிடைத்துள்ளன.

தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள் உரை, இலக்கண விளக்கம் என இலக்கணப் பதிப்புகளையும், நீதி நெறி விளக்கம், கலித்தொகை, சூளாமணி என இலக்கிய நூல்களையும் பதிப்புச் செய்தவர். பதிப்பு உலகில் பலரும் பின்பற்ற வேண்டிய பல அரிய கருத்துக்களைத் தன் அனுபவத்தைக் கொண்டு எழுதி விளக்கியுள்ளமை சங்க இலக்கியங்களுக்குச் செம்பதிப்புக் காணும் நடவடிக்கைக்குப் பெரிதும் துணை செய்வதாகும்.

சி.வை.தா. அவர்களின் பதிப்பு அனுபவத்தின் சாரமாக இன்றைய தமிழ்ச் சமூகத்திற்கு உதவும் வகையில் அவர் தந்துள்ள பதிப்புரையினைக் காட்டுவது பொருத்தமாக அமையும்.

***யானை யானனனைத் தேனிமிர் கடம்பனை***
***வானமர் குழவியா லோனுறை சடையனை***
***இமய சிமிலமென் குமரியென் றமையும்***
***உமையைத் தமியேன் றமமலந் துமிப்ப***
***போத சற்குருவாய் மாதொரு பாகன்***
***வேத வனத்தெழூஉ மேதகு கயிலாய***
***நாத தேசிகன் பாதவருட் கொடுதொழீஇக்***
***கற்றறி வில்லாக் கடையனேன் றனக்கு***
***நற்றமிழ் கொளுத்திய நாவலன் சுன்னை***
***முத்துக் குமார வித்தக னடியிணை***
***சித்தத் திருத்திமற் றுத்தம புலவர்***
***அடிக்கம லங்களென் முடிக்கணி கொடுக்கநின்(று)***
***அடியேன் கூறுவ(து) ஒன்றுளது***

*உலகிலுள்ள கல்லெல்லாஞ் சாதி ரத்தினமாயின் அவை உயர்வுடையனவாமா? இழிந்தனவும் உளவாயினன்றே ஒழிந்தன உயர்வாவது? ஆதலாற் றம்உயர்வு விளங்குதற் பொருட்டாகவாவது என் புன் மொழியையும் பெரியோர்தம் பொன்மொழியினடுவே வைத்தலொழியாரெனத் துணிந்தனன்.*

எனப் பக்கங்கள்தோறும் சான்றுகள் காட்டி நூலாசிரியர் எழுதியுள்ளமை பாராட்டத்தக்கதாகும்.

சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்களுடைய பல்வேறு தரப்பட்ட திறன்களையும், அவர் செய்துள்ள தமிழ்ப் பணிகளையும் அறிந்து கொள்ளப் பேராசிரியை முனைவர் மு. சற்குணவதியின் இந்த நூலும் துணை செய்யும்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும் **நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக்கடன்பட்டுள்ளது.

தமிழ்ப்பணிகளுக்கு ஆற்றுப்படுத்தி வரும் மாண்புமிகு **தமிழக நிதியமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன்** அவர்களுக்கு எம் நன்றி என்றும் உரியது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்து வரும் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத் துறை அரசுச் செயலாளர் திரு க. முத்துசாமி இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள், இந்நூலை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் மற்றும் எழுத்துருவை இந்நிறுவனத்தில் ஒளிவடிவமைப்புச் செய்த திருமதி பி. கௌசல்யா ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

# ஆசிரியரைப்பற்றி



இணைப் பேராசிரியர் திருமதி மு. சற்குணவதி அவர்கள் தமிழ் நாட்டுப்புறவியலில் முனைவர் பட்டமும் முதுமுனைவர் பட்டமும் பெற்றவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் வீ. அரசு, பேராசிரியர் பொற்கோ ஆகியோரின் மாணவியாக இருந்து ஆராய்ச்சி செய்ததுடன், தற்போது அதே பல்கலைக் கழகத்தில் பேராசிரியராகவும் பணிசெய்கிறார். இதுவரை பன்னிரண்டு நூல்களை எழுதியுள்ளார். நாட்டுப்புறவியல் தொடர்பாக 5 நூல்களைப் படைத்துள்ளார். அவற்றுள் **தமிழக நாட்டுப்புறவியல், மண்ணில் வாழும் மலைமக்கள்–லம்பாடிகள், மலையில் வாழும் மண்மக்கள்–பளியர்**, ஆகிய நூல்கள் பலரின் பாராட்டைப் பெற்றவை. '**யாரொடும் பகை கொள்ளற்க**' என்னும் இலக்கியக் கட்டுரைகள் அடங்கிய நூல் மக்களின் மனித நேயத்தை எடுத்துரைப்பது. 80க்கும் மேற்பட்ட ஆய்வுக்கட்டுரைகள் எழுதி உள்ளார். பயன்தரும் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனையில் **தினகரன், தமிழ் ஓசை, கண்ணியம், கல்வி, வாசுகி, தங்கமங்கை, சிந்தனையாளன்** முதலான பல இதழ்களில் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

# என்னுரை

தமிழ் இலக்கியங்கள் சுவடிகளில் எழுதப்பட்டிருந்த காலத்தில் முனைந்து கற்றோர் மட்டுமே இலக்கியங்களைப் படித்து அறியும் நிலை இருந்தது. அவை பதிப்பு செய்யப்பட்ட பிறகு அவற்றை அனைவரும் படிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அவ்வாறு பயன்விளையப் பாடுபட்டவர்களுள் முக்கியமானவர் இருவர். 1. சி.வை. தாமோதரம் பிள்ளை 2. உ.வே.சாமிநாதையர். உ.வே.சா.வைப் பற்றித் தமிழ் உலகம் அறிந்து போற்றும் அளவிற்குச் சி.வை.தா.வைப் பற்றி அறியவில்லை. காரணம் அவர் ஈழத்தமிழராக இருந்ததாலோ என்று எண்ணத் தோன்றுகிறது. எப்படியேனும் தமிழ்ப் பதிப்பு வரலாற்றில் சி.வை.தாவிற்கு ஒரு பெரிய இடமுண்டு. அவரைப் பற்றி அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்த வாய்ப்புக் கிடைத்தது. அதனடிப்படையில் சி.வை.தா.பற்றி வெளிவந்திருந்த நூல்களை படிக்கத் தொடங்கினேன். அவரின் வாழ்க்கை வரலாற்றை முழுவதுமாகப் படித்து முடித்த பிறகு நெஞ்சம் கனத்துப் போனது. கண்கள் ஈரமாயின. அந்த அளவிற்கு அவரின் வாழ்க்கை போராட்டம் நிரம்பியதாக இருந்தது.

சி.வை.தா. அவர்கள் எளிய குடும்பத்தில் பிறந்து வளர்ந்து பல உயரிய படிப்புப்படித்து, உயரிய பதவிகள் வகித்து அதன் மூலமாகச் சமுதாயத்தொண்டு செய்தவர். பல இழப்புகளைத் தமது வாழ்வில் அடைந்தபோதும் சோர்ந்து முடங்கிவிடாமல் உள்ளம் துவண்டபோது துவண்டு அதன் பிறகு தம்மைத் தேற்றிக் கொண்டு தமிழிற்காக உழைக்கத் தொடங்கியவர். அவ்வாறு தொடங்கிய தொண்டு பல இன்னல்களைத் தாங்கிக் கொண்டு, பணிசெய்ய வைத்தது. அவர் பதிப்பித்த ஒவ்வொரு நூலும் ஒரு வைரக்கல்லாகும். அந்த நூல்களைப் பதிப்பிக்கும்போது அவர்பட்ட பாடுகள் கொஞ்சம் நஞ்சமல்ல. அவர் அனுபவித்த அவமானங்கள் சொல்லி மாளா. அந்த நிலையிலும் அவர் ஒரு மாமனிதர் என்பதை நிரூபித்தார். எனவே அவரைப்பற்றிப் பேசுவது மனத்திற்கு மிகவும் பிடித்திருந்தது. ஓர் ஆத்ம திருப்தியும் ஏற்படுகிறது. வெறும் அறக்கட்டளைச்

சொற்பொழிவோடு நிறுத்தாமல் அவர் பற்றிய ஒரு நூலாக வெளிவரத் துணை செய்த இவ் அறக்கட்டளைப் பொறுப்பாளராக இருந்துவரும் இந்நிறுவன இணைப் பேராசிரியர் முனைவர் தி. மகாலட்சுமி அவர்களை நினைத்து அகம் மகிழ்கிறேன். அதனடிப்படையில் இந்த நூல் உருவானது.

சி.வை.தா. அவர்கள் பற்றி, நான் பல நூல்களில் படித்த செய்திகளை நான் உணர்ந்தவகையில் எடுத்துரைத்துள்ளேன். பின்னிணைப்பில் வரும் செய்திகள் முனைவர் ப. தாமரைக் கண்ணன் அவர்களின் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை. சி.வை.தா.பற்றிச் சுருக்கமான அறிமுக நூலாக இது திகழும் என்பதில் ஐயமில்லை. தமிழ் உலகம் சி.வை.தா. பற்றி நினைவு கூரவும் இந்த நூல் வழி வகுக்கும்.

சி.வை.தா. பற்றிய இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவாற்றும் அரிய வாய்ப்பினை எனக்களித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் அவர்களுக்கும் முனைவர் தி. மகாலட்சுமி அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினை உரித்தாக்குகிறேன். இந்த நூலிற்கு உறுதுணையான செய்திகளை நூல் வடிவில் தந்த முனைவர் தாமரைக்கண்ணன், முனைவர் மணிகண்டன் அவர்களுக்கும் எனது அன்பு நிறைந்த நன்றி. தமிழுலகம் இந்த நூலைப் படித்து, சி.வை.தா. அவர்களை மனத்துள் நினைந்து போற்ற வேண்டும் என்கிற எனது அவாவினையும் இதன்வழி தெரிவித்துக் கொள்கிறேன்.

சி.வை.தா. அவர்கள் ஈழத்தில் பிறந்து தமிழகத்தில் வாழ்ந்த தமிழறிஞர். எனவே தமிழர்கள் ஒவ்வொருவரும் அவருக்கு நன்றிக் கடன் பட்டுள்ளோம் என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

அன்புடன்,

**மு. சற்குணவதி**

# உள்ளே

# 1. வாழ்க்கை வரலாறு

தமிழ் இலக்கியங்கள் உலக அரங்கில் இன்று பெரும் புகழ்பெற்று விளங்குவதற்குக் காரணமாக இருந்த அறிஞர்கள் பலர். அவர்களுள் மிகவும் முக்கியமானவர்கள் ஒருசிலர். அந்த ஒருசிலருள் குறிப்பிடத்தக்கவர் சி.வை. தாமோதரம் பிள்ளை. உ.வே.சா. பேசப்பட்ட அளவிற்குத் தமிழர்களால் பேசப்படாதவர் சி.வை. தாமோதரம்பிள்ளை. அதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். எது எப்படியாயினும் தமிழர்களால் மறக்கப்படாமல், மறுக்கப்படாமல் நினைவில் கொள்ள வேண்டியவர், சி.வை.தா..

ஏடுகளில் இருந்த பிரதிகளை அச்சுப் பிரதிகளாக மாற்றி வரலாற்றில் இடம்பெற வைத்தவர்களுள் சி.வை.தா.வும் ஒருவர். அவரது வாழ்வும் பணியும் வரலாற்றில் அழிக்க முடியாதவை. பல்துறைப்புலமை உடையவராக விளங்கியவர் சி.வை.தா. அவையாவற்றிலும் உயரியது அவரின் தமிழ்ப்பணி.

இந்தியாவின் வரைபடத்தை நோக்குகிற போது அதன் தென்பகுதியில் சிறிய தீவாகக் காட்சி அளிப்பது இலங்கை. தாயின் அருகில் அமர்ந்திருக்கும் சேயைப் போன்று இந்தியாவை ஒட்டி இலங்கை அமைந்துள்ளது. இன்றைய நிலையில் போராட்டப் பூமியாகக் காட்சி அளிக்கும் இலங்கை ஒரு காலத்தில் அமைதிப் பூங்காவாக அமைந்திருந்தது.

இயற்கை அதிசயங்களுள் ஈடு இணையற்றதாக விளங்கும் ஆழியின் நடுவில் அழகு எழில் கொஞ்சும் பூமியாக விளங்குவது இலங்கை. ஸ்ரீலங்கா என்று அழைக்கப்படும் இலங்கைத் தீவில் தமிழர்கள் வாழும் பகுதி யாழ்ப்பாணம் என்னும் நகரம். அதனருகே புத்தூர் என்னும் ஊர் அமைந்துள்ளது. அதனைச் சார்ந்த சிற்றூர் சிறுப்பிட்டி என்பதாகும். இந்தச் சிற்றூரில் வாழ்ந்து வந்த வைரவநாதர்

என்பவருக்கும் ஏழாலை ஊரைச் சேர்ந்த பெருந்தேவியார் என்பவருக்கும் மூத்த மகனாகச் சி.வை. தாமோதரம் பிள்ளை பிறந்தார். 12.9.1832ஆம் ஆண்டு பிறந்த இவருக்குப்பின் ஆறு தம்பியர் பிறந்தனர்.

சி.வை.தா.வின் தந்தை தமிழ்ப்புலமை மிக்கவர். ஆசிரியராக விளங்கியவர். தொடக்கக் கல்வியைத் தம் தந்தையாரிடமே சி.வை.தா. கற்றார். அக்கால வழக்கப்படி, அறநூல்கள், சொற்பொருள்கூறும் நிகண்டு நூல்கள் ஆகியவற்றைக் கற்ற பின்னர், மேலும் சில தமிழ் நூல்களை சி.வை.தா. கற்க விரும்பினார். சிறுப்பிட்டிக்கு அருகிலமைந்த சுன்னாகம் என்னும் ஊரிலுள்ள முத்துக் குமாரக் கவிராயரிடம் இலக்கிய இலக்கணங்களை நன்கு பயின்றார். ஆங்கிலமும் கற்கும் ஆர்வமுடையவராய்த் தெல்லியம்பதி அமெரிக்க மிசன் கலாசாலையில் ஆங்கிலம் கற்றார். அதனைத் தொடர்ந்து யாழ்ப்பாண வட்டுக்கோட்டைப் பல்கலைக் கல்லூரியில் பயின்று கணிதம், தத்துவம், வானவியல் முதலானவற்றிலும் தேர்ந்தார். அதன் பிறகு யாழ்ப்பாணப் பல்கலைக் கல்லூரியில் எட்டு ஆண்டுகள் பயின்று தம் இருபதாம் வயதில் சிறந்த கல்வித் தேர்ச்சி பெற்றார். இவரின் புலமையைக் கண்ட தமிழாசிரியராகிய நெவின்சு என்பவர் சி.வை.தா.வைப் 'பண்டிதர்' என்று போற்றினார். பல்துறை அறிவு பெற்றிருந்த சி.வை.தா. தமிழில் அதிகப் புலமை மிக்கவராக விளங்கினார். அதன் பிறகு 1857ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகம் தொடங்கப் பெற்றவுடன் நடத்தப்பெற்ற பி.ஏ. பட்டத்திற்குரிய தேர்வில் முதல் மாணவராகத் தேறினார்.

பி.ஏ. பட்டம் பெற்ற சி.வை.தா. சட்டக்கல்வி பயின்று 1871ஆம் ஆண்டு பி.எல். தேர்வில் வெற்றி பெற்றார். இவையாவும் சி.வை.தா. பட்டத்திற்காகப் படித்த படிப்புகள். ஆனால் அவர் வாழ்நாள் முழுவதும் தமிழ் இலக்கணங்களையும், இலக்கியங்களையும் பயின்றும் ஆராய்ந்தும் வந்தார். சைவராகப் பிறந்த சி.வை.தா. கல்விக்காக, கிறித்துவ மதம் மாறினார். மேலை நாட்டுக் கல்வி கற்க விரும்பியபோது அவர் காலத்தில் கிறித்தவர்களுக்கே மேலை

நாட்டு ஆங்கிலக் கல்வி கற்பிக்கப் பெற்ற நிலை இருந்து வந்தது. அதனால், தாமும் கிறித்தவராக மதம்மாறி, மேலைக் கல்வியைப் பெற்றார். ஆயினும் சைவசமயக் காவலரான ஆறுமுக நாவலரின் தொடர்பு ஏற்பட்டவுடன் சி.வை.தா. கிறித்துவச் சமயத்திலிருந்து சைவ சமயத்துக்கே மாறி, இறுதிவரையிலும் அச்சமயத்தையே சார்ந்திருந்தார். கிறித்தவராக மாறியபோது சி.எல்.டபுள்யூ கிங்க்ஸ்பறி (C.L.W. Kingsbury) என்ற பெயரில் கல்வி பயின்றார். ஆறுமுகநாவலர் செல்வாக்கால் மீண்டும் சைவராக மாறியபிறகு சி.வை.தாமோதரம் பிள்ளை என்ற பெயரையே தாங்கி இருந்தார்.

சி.வை.தா. தம் இருபதாம் வயதில் கல்வி ஓரளவு முடிந்தவுடனே யாழ்ப்பாணக் கோப்பாய் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் ஆசிரியராகும் வாய்ப்பினைப் பெற்றார். அவர்தம் புலமையையும் திறமையையும் கேள்விப்பட்ட பெர்சிவல் பாதிரியார் தாம் நடத்திவந்த 'தினவர்த்தமானி' என்ற வார இதழுக்குத் துணையாசிரியராக இருக்குமாறு விரும்பி வேண்டினார். அவர் விரும்பியவாறே சி.வை.தாவும் அவ்இதழின் துணை ஆசிரியராகப் பணியாற்றத் தொடங்கினார். தினவர்த்தமானி எனப்படும் அவ்இதழ் வாரந்தோறும் வியாழக்கிழமையில் வெளிவந்தது. சமுதாயச் செய்திகள், இலக்கியம், அறிவியல் முதலிய செய்திகள் அவ்இதழில் இடம் பெற்றன.பெர்சிவல் திருத்தந்தை, ஆறுமுக நாவலரைக் கொண்டு கிறித்தவத் திருமறையாம் விவிலியத்தை மொழியாக்கம் செய்தவர். அவர், அவ்இதழிலிருந்து ஓய்வு பெறும்போது சி.வை.தா.வை அவ்இதழின் ஆசிரியராகப் பணித்தார். அதனால் சி.வை.தாவின் அறிவையும் எழுத்தாற்றலையும் உலகம் அறிந்தது.

இதழாசிரியர் பணியும், கல்வி கற்பிக்கும் ஆசிரியப் பணியையும் சி.வை.தா. ஒருங்கே ஆற்றி வந்தார். தமிழிலும் ஆங்கிலத்திலும் வல்ல அவர், பேராசிரியர் பர்னல், சர் வல்டர் எலியட், லூசிங்டன் முதலாய ஆங்கிலப் பெருமக்களுக்குத் தமிழ் கற்பித்து வந்தார். இச்செய்தி அரசுக்கு எட்டியது. அதனால் அரசு இவரைச் சென்னை மாநிலக் கல்லூரித்

தமிழாசிரியராகப் பணியமர்த்தியது. அதன்பிறகு அவருக்குக் கள்ளிக்கோட்டை அரசினர் கல்லூரித் தமிழாசிரியராகும் வாய்ப்பு கிடைத்தது. அக்கல்லூரியில் சி.வை.தா திறம்படப் பணியாற்றினார். ஆகவே, சென்னை அரசாங்க வரவு செலவு கணக்குத் துறையில் அலுவலராகும் பணி கிடைத்தது. அப்போது ஒரு நாள் அவ் அலுவலகத் தலைவர் விரைந்து முடிக்க வேண்டிய ஒரு கணக்கைத் தாமோதரம் பிள்ளையிடம் கொடுத்தார். ''இதனை யானே முடிப்பதாயின் ஏழு நாட்களாகும். நீர் பத்து நாள்களில் முடித்துத் தருவீரென நம்புகிறேன்'' என்றார். அப்பணியை ஏற்றுக் கொண்ட சி.வை.தா. நான்கே நாளில் முடித்துத்தந்தார். அலுவலகத் தலைவர் சி.வை.தாவைப் பாராட்டியதுடன் பதவி உயர்வும் வழங்கினார். அப்பதவியை வகித்துக்கொண்டே சட்டக்கல்வி பயின்று 1871ஆம் ஆண்டு சட்டத் தேர்வு எழுதித் தேர்ச்சி பெற்றார். அதன்பின்னர் 1882ஆம் ஆண்டு தம் ஐம்பதாம் வயதில் அரசு அலுவலிலிருந்து ஓய்வு பெற்று உதவித்தொகை பெற்று வந்தார்.

அதன்பிறகு புதுக்கோட்டை அரசின் அமைச்சராக விளங்கிய சேசையர் என்பவர் சி.வை.தா.வுக்கு கலித் தொகையைப் பதிப்பிக்கப் பொருள் உதவியது மட்டுமன்றி, சி.வை.தா.விடம் பேரன்பு பூண்டு அந்த ஆண்டே புதுக்கோட்டை முறை மன்ற நடுவர்களில் ஒருவராகச் சி.வை.தா.வை நியமித்து மகிழ்ந்தார். அப்பொறுப்பினை நான்காண்டுகள் செவ்வனே ஏற்று, 1880இல் அப்பொறுப்பினின்றும் விலகினார். அதன்பின், சென்னைப் பல்கலைக் கழகப் பாடத்திட்டக் குழுவின் உறுப்பினராகவும், தேர்வுத் திட்டம் வகுக்கும் குழுவிற்குத் தலைவராகவும் விளங்கினார். அப்போது, இவர் பணியாற்றிய திறம் குறித்தும் இவர்தம் சிறப்பினைக் குறித்தும் சான்றோர் பாராட்டினர்.

தாமோதரம் பிள்ளையின் பணிகள், தொடக்க நிலை ஆசிரியராகவும், தமிழாசிரியராகவும், இதழாசிரியராகவும், உரையாசிரியராகவும், உயர் அலுவலராகவும், பாடநூல் குழுவின் தலைவராகவும், முறைமன்ற நடுவராகவும் எனப் பல்வேறுபட்டதாக அமைந்திருந்தன.

கற்ற கல்வியிலும் செய்த பணிகளிலும் நற்பேறு பெற்று விளங்கிய சி.வை.தா. இல்வாழ்வில் பல சிக்கல்களை எதிர்கொள்ள வேண்டி இருந்தது. தாமோதரம்பிள்ளை இளவயதினராக இருந்தபோதே தம் தந்தையாரை இழந்தார். தம் தம்பியர் அறுவரைக் காத்து, அவர்களுக்குக் கல்வி கற்பித்தும் தக்க பணியில் அமர்த்தியும், மணம்செய்வித்தும் தம் கடமைகளைத் தந்தைக்குப் பதிலாகத் தந்தையாகவே இருந்து செய்தார்.

பெரிய குடும்பத்தைக் காக்க வேண்டிய பொறுப்பான கடமையுடன் தம் பணிகளில் பாங்குடன் உழைத்து உயர் பதவிகளையும் சி.வை.தா. அடைந்து வந்தார். இதனைக் கண்ட அவர்தம் உற்றார் உறவினர், அவரைத் திருமணம் செய்து கொள்ளுமாறு தூண்டினர். அதன்பிறகு சி.வை.தா. தெல்லியம்பதி காலிங்கராயர் வழிவந்த வள்ளியம்மையை மணம்புரிந்தார். அவர் இரு குழந்தைகளைப் பெற்று இனிது இல்லறம் நடத்தித் திடீரென நோய் வாய்ப்பட்டு இயற்கையெய்தினார். ஆகவே வள்ளியம்மையின் உடன் பிறந்தாராகிய நாகமுத்தம்மாளைச் சி.வை.தா. இரண்டாம் தாரமாக மணந்தார். இவருக்கு ஆறு குழந்தைகள் பிறந்தன.

அவர்களுள் மூத்தமகன் கனகரத்தினம் இளம் வயதிலேயே இறந்தார். இரண்டாம்மகன் சி.தா. அமிர்தலிங்கம் என்பவர் தமிழ், ஆங்கிலம் இரண்டிலும் வல்லவராய் விளங்கினார். அமிர்தலிங்கம் மணம் செய்து ஒருமகனையும், ஒரு மகளையும் பெற்றார். அதன்பிறகு அமிர்தலிங்கம் தம் இருபத்தாறாம் வயதில் நோய்வாய்ப்பட்டு இறந்தார். சி.வை.தா.வின் மூன்றவாது குழந்தையான பொன்னம்மாள் என்னும் பெண் திருமணம் செய்து சில ஆண்டுகள் இல்லறம் நடத்தி, மகப்பேறின்றி இறந்தார். நான்காவது மகனான சோமசுந்தரம் என்னும் ஆண் பிள்ளையை அவரின் பதினாறாம் வயதில் சி.வை.தா. பறிகொடுத்தார்.

சி.வை.தா.வின் ஐந்தாவது மகன் அழகுசுந்தரம். அவர் திருமணம் செய்து இரண்டு பிள்ளைகள் பெற்றுக் கொழும்பில் நீண்ட ஆயுள் பெற்றுத் திகழ்ந்தார். ஆறாவது குழந்தையான சிவபாக்கியம் என்னும் பெண் மணம் செய்து

சிறிது காலத்திலேயே மகப்பேறின்றி நோய் காரணமாக இறந்தார். சி.வை.தா.வின் முதல் மனைவி இறந்த கொஞ்ச காலத்திலேயே முதல் மனைவியின் குழந்தைகள் இருவரும் இறந்தனர். இடிமேல் இடிஇடித்தாற்போலச் சி.வை.தா.வின் குலத்தோன்றல்களும், இரு மனைவியரும் ஒருவர்பின் ஒருவராய் மறைந்தனர். இந்நிலையில் குடும்பச் சூழல் கருதி சி.வை.தா. மூன்றாம் மணமும் புரிந்தார். பின்னர், சிங்காரவேல், வெற்றிவேல் என மக்கள் இருவரும் அவர் வழியே தோன்றினர்.

1893ஆம் ஆண்டு, சி.வை.தா. வாழ்வில் மேலும் ஓர் அதிர்ச்சியான நிகழ்ச்சி நடந்தது. அது சி.வை.தா.வின் மகன் சி.தா. அழகு சுந்தரம் கிறித்தவ மதம் மாறிய நிகழ்ச்சியாகும். சி.வை.தா.வுக்கு மக்களாய்ப் பிறந்தோர் யாவரும் பிள்ளைப்பருவம், காளைப் பருவம், திருமணம் முடிந்த சில ஆண்டுகள் என்னும் முப்பது வயதிற்குள்ளாகவே முடிவு கண்டவர்கள் ஆயினர். சி.வை.தா. அழகு சுந்தரம் சைவ சமயத்திலிருந்து கிறித்தவ சமயத்துக்கு மாறியமை சி.வை.தா.வுக்குப் பெரும் அதிர்ச்சியைத் தந்தது. அவரைத் தம் குடும்பத்திலிருந்து நீக்கி, தம்முடன் வாழுதல் கூடாதென்று வெறுத்தொதுக்கினார். அழகு சுந்தரம் கிறித்துவ மதம் மாறியபின் தம் பெயரை மாற்றிக் கொண்டார். சி.தா. அழகுசுந்தரம், தனது நண்பரான ரெவரெண்ட் கிங்ஸ்பெரி திருவாசகத்தையும் கிறித்தவ வேதத்தையும் ஒருமைப்படுத்திக் கூறிய கருத்துகள் என் மனத்தை கவர்ந்தன அதனால் கிறித்தவராக மாறினேன் என்றும் இயேசு கிறிஸ்து மனிதராக இருந்து தெய்வநிலையடைந்தார் என்றும் பேசியும் எழுதியும் வந்தார். அப்பேச்சும் எழுத்தும் பாதிரிக் கிறிஸ்துவருக்கு வெறுப்பூட்டின. அழகு சுந்தரரைத் திருச்சபையினின்றும் விலக்கினர்.

இவ்வாறு மதம்காரணமாகத் தந்தை, கிறித்தவ மதத்தினர் ஆகியவர்களால் அலைக்கழிக்கப்பெற்றபோதும் சி.தா. அழகு சுந்தரம் ஏசுவரலாறு, அகப்பொருள் குறள், இராமன்கதை, பாண்டவர் கதை, சந்திரகாசம் முதலான நூல்களை எழுதிச் சிறப்புப் பெற்று விளங்கினார்.

சி.வை.தா. அழியும் நிலையையடைந்த, பண்டைத் தமிழிலக்கிய இலக்கண நூல்களை அச்சிலேற்றி, அரிய பதிப்புரைகளை எழுதிப் பதிப்பித்தார். தம் வாழ்நாள் முழுவதும், தாம் ஆற்றிய பல்வேறு பணிகளுக்கிடையேயும் தமிழ்ப் பணியைத் தவறாமல் ஆற்றி வந்தார்.

சி.வை.தாமோதரர் செய்து வந்த தமிழ்த் தொண்டு, கல்வித்தொண்டு, முறைத்தொண்டு ஆகியவற்றை நன்கறிந்த அரசு அவரைச் சிறப்பிக்கக் கருதி 'இராவ் பகதூர்' என்னும் மதிப்புறு விருதினை 1885ஆம் ஆண்டு வழங்கியது. அதனை அறிந்த மைசூர் அரசு தாமோதரரை அழைத்துப் பாராட்டெடுத்துப் பரிசி வழங்கியது. ஆங்கிலப் பெருமக்கள், செல்வர்கள், திருமடத் தலைவர்கள்ஆகியோரெல்லாம் தாமோதரர் பெற்ற சிறப்பினை வரவேற்றுப் பாராட்டினர்.

இன்பமும் துன்பமும் இணைந்ததுதான் மனித வாழ்க்கை என்பதை அனுபவத்தில் உணர்ந்த சி.வை.தாமோதரனார் தமது கடமைகளைத் தவறாது செய்துவந்தார். தமது எழுபதாவது வயதில் 1901ஆம் ஆண்டு சனவரி முதல்நாள் செவ்வாய்க் கிழமை காலை 9.30 மணிக்கு அவர்தம் உடன் பிறந்தார் ஆகிய சி.வை. சின்னப்பாவும், மகனாகிய அழகு சுந்தரமும், சுற்றத்தாரும் நட்பினரும் சூழ்ந்திருக்க இயற்கையெய்தினார்.

# 2. தமிழ்ப்பணி

தமது சொந்த வாழ்க்கையில் பல இன்னல்களைச் சந்தித்த சி.வை.தா. துன்பங்களுக்கிடையிலும் அதிசயிக்கத்தக்க வகைகளில் தமிழ்ப்பணி செய்துள்ளார். தாமே சொந்தமாகப் பல நூல்களை எழுதியும் பல நூல்களைப் பதிப்பித்தும் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு மைல்கல்லாக விளங்கினார். சி.வை.தா.வின் பதிப்புகள் இருவகைப்படும். 1. இலக்கணப் பதிப்புகள் 2. இலக்கியப் பதிப்புகள்.

**இலக்கண நூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. தொல்காப்பியம் | - | சொல்லதிகாரம் சேனாவரையர் உரை (1868) |
| 2. வீரசோழியம் | - | மூலமும் பெருந்தேவனார் உரையும் (1881) |
| 3. இறையனாரகப் பொருள் | - | நக்கீரர் உரை (1883) |
| 4. தொல்காப்பியம் | - | பொருளதிகாரம் நச்சினார்க்கினியர் உரை (1885) (3 பகுதிகள்) |
| 5. இலக்கண விளக்கம் | - | (1889) |
| 6. தொல்காப்பியம் | - | எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரை (1891) |
| 7. தொல்காப்பியம் | - | சொல்லதிகாரம் நச்சினார்க்கினியர் உரை (1892) |

**இலக்கிய நூல்கள்**

1. நீதி நெறி விளக்கம் (1854)
2. தணிகைப் புராணம் (1883)

3. கலித்தொகை - நச்சினார்க்கினியர் உரை (1887)

4. சூளாமணி - மூலம் மட்டும் (1889)

சி.வை.தா. பதிப்பித்த நூல்கள் மொத்தம் பதினொன்று. அவற்றுள் இலக்கண நூல்கள் ஏழு; இலக்கிய நூல்கள் நான்கு ஆகும்.

### 1. நீதிநெறி விளக்கம்

இலங்கைக் கோப்பாய்ப் பள்ளியில் தாமோதரம் பிள்ளை ஆசிரியராக இருந்தபோது 1854ஆம் ஆண்டு, குமர குருபரர் இயற்றிய நீதிநெறி விளக்கத்தை மானிப்பாய் அமெரிக்கன் மிசன் அச்சுக்கூடத்தில் அச்சடித்துப் பதிப்பித்துள்ளார்.

### 2. தொல்காப்பியம் - சொல்லதிகாரம் சேனாவரையர் உரை

சி.வை.தா. பதிப்பித்த இரண்டாவது தமிழ் நூல் தொல்காப்பியம் சேனாவரையர் உரையுடன் கூடிய தொல்காப்பியச் சொல்லதிகாரமாகும். 1868ஆம் ஆண்டு நல்லூர் ஆறுமுக நாவலரவர்களைக் கொண்டு பல பிரதிகளைப் பரிசோதிக்கச் செய்து, சென்னப்பட்டணம் ஊ. புஷ்பரதச் செட்டியாரது கலா ரத்நாகரவச்சுக் கூடத்தில் பதிப்பித்தார். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தைச் சேனாவரையர் உரையுடன் முதலில் பதிப்பித்தவர் தாமோதரம்பிள்ளையே ஆவர். அவருக்குப்பின் பலரின் பதிப்புகள் வெளிவந்தன.

### 3. வீரசோழியம் (பெருந்தேவனாருரை)

புத்தமித்திரனார் இயற்றிய வீரசோழியத்தைப் பெருந்தேவனார் உரையோடு, பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து 1881ஆம் ஆண்டு தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணிய ஐயரது, சென்னை வித்தியா வர்த்தனி அச்சுக் கூடத்தில் பதிப்பித்தார். இந்நூலைப் பதிப்பிக்க யாழ்ப்பாணம் தி.குமாரசுவாமிச் செட்டியார் பொருள் உதவி செய்தார். வீரசோழியம் பதிப்பித்தமைக்காகச் சி.வை.தா.வைப் பல அறிஞர்கள் பாராட்டினர்.

## 4. தணிகைப்புராணம்

1881இல் வீரசோழியத்தைப் பதிப்பித்து அறிஞர் பலரின் பாராட்டுகளைப் பெற்ற சி.வை.தா. அடுத்த ஆண்டு 1882இல் தணிகைப் புராணம் மூலம் மட்டும் பதிப்பித்தார். திருவாவடுதுறை ஆதினத்துக் கச்சியப்ப முனிவர் அருளிச் செய்த தணிகைப் புராணம் திருவாவடுதுறை ஆதீனம் சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் அனுமதியோடு யாழ்ப்பாணம் சி.வை.தாமோதரம் பிள்ளையால் பல பிரதிகளைப் பரிசோதித்துச் சென்னபட்டணம் ஸ்காட்டிஷ் அச்சகத்தில் அச்சிடப்பட்டது. இதற்கு உதவியவர் யாழ்ப்பாணம் தி.குமாரசாமிச் செட்டியாராவர்.

## 5. இறையனாரகப் பொருள்

தணிகைப் புராணத்தைப் பதிப்பித்த ஆண்டிலேயே இறையனாரகப் பொருளை நக்கீரர் உரையுடன் சி.வை.தா. பதிப்பித்தார். சென்னபட்டணம் ஸ்காட்டிஷ் அச்சகத்தில் இந்நூல் அச்சிடப்பட்டது. இந்நூல் ஆசிரியர் இறையனார். இறையனாரை மதுரை ஆலவாய்ச் சோமசுந்தரக் கடவுள் என்று இந்நூலின் உரைகூறும். பாண்டியநாடு பன்னிரண்டாண்டுகள் மழையின்றி வருந்தியபோது பாண்டியன் தன் அவைக்களப் புலவரைப் பஞ்சம் நீங்கும்வரை வளமுற்ற நாடுகளுக்குச் சென்று வரும்படி விடுத்தான். சென்ற புலவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து, பாண்டிநாடு மழை பெய்து செழிப்புற்றவுடன் வந்தனர். அவர்களிடையே பொருள் இலக்கணம் வல்ல புலவர் இலர். அதனால் மனத்துயரடைந்த பாண்டியனின் கவலை நீங்க, ஆலவாய்ப் பெருமானார் 60 சூத்திரங்களடங்கிய அகப்பொருள் நூலொன்றை மூன்று செப்பிதழ்களில் எழுதிப் பாண்டியனுக்குக் கிடைக்குமாறு செய்தார். அதற்குப் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும் உரைசெய்தனர். அவ் உரைகளிலே நக்கீரனார் உரையே சிறந்ததென உருத்திரசன்மர் என்பவரால் தெரிந்தெடுக்கப்பட்டது. இதுவே அவ்உரை கூறும் வரலாற்றின் சுருக்கம்.

இந்நூல் இறையனார் என்னும் புலவர் ஒருவரால் எழுதப்பட்டதாக இருக்கலாம் என்று நினைத்தற்

கிடமிருக்கிறது. இறையனாரகப் பொருள் கடைச்சங்க நூலென அந்நூலின் உரையால் அறியலாம். தொல்காப்பியம் இடைச்சங்க காலத்திலேயே எழுந்தது. கடைச்சங்கத்து நூலாகவும் விளங்கியது. அந்நூலில் அகப்பொருள் அகத்திணையியல், களவியல், கற்பியல் எனப் பல இயல்களாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளது. அதன் வழிநூல் போல் விளங்கும் இந்நூல் மிகச்சுருக்கமாக உள்ளது. இந்நூலின் உரை மிகவும் அழகியது. பண்டைக்கால உரைநடைக்குச் சிறந்த சான்றாக உள்ளது. இந்நூல் களவு, கற்பு என இரண்டு இயல்களையும் அறுபது சூத்திரங்களையும் உடையது.

இத்தகைய இலக்கண நூலினைச், சி.வை.தா. நீதிநெறி விளக்கம், தொல்காப்பியம் - சேனாவரையம், தணிகைப் புராணம் ஆகிய நூல்களைப் பதிப்பித்தாற் போலவே பதிப்புரை இன்றிப் பதிப்பித்துள்ளார்.

### 6. தொல்காப்பியம்-பொருளதிகாரம் : நச்சினார்க்கினியம்

சென்னையிலிருந்து திருக்குடந்தைநகருக்கு 1885ஆம் ஆண்டு சென்று, தமிழ் நூல்களைச் சேகரித்தும் பரிசோதித்தும் வந்த சி.வை.தா. தொல்காப்பியப் பொருளதிகாரத்தை, நச்சினார்க்கினியர் இயற்றிய உரையோடும் பலநாட்டுப் பிரதிகளைக் கொண்டு பரிசோதித்துச் சென்னை ஸ்காட்டிஷ் அச்சகத்தில் 1885ஆம் ஆண்டு பதிப்பித்தார்.

### 7. கலித்தொகை - நச்சினார்க்கினியருரை

தொல்காப்பியப் பொருளதிகாரத்தைப் பதிப்பித்து அதிக அளவில் பொருளிழப்படைந்த சி.வை.தா. அதனை ஈடு செய்ய எண்ணி இந்து நாளேட்டிலும் மற்றொரு விண்ணப்பப் பத்திரத்திலும் ஆங்கிலத்தில் விளம்பரம் செய்தனர். அவற்றைக் கண்ணுற்ற தமிழறிஞர் பலர் சி.வை.தா. அவர்களுக்குப் பொருளுதவி புரிய முன்வந்தனர். தமிழறிஞர்கள், ஆர்வலர்களுடைய பொருளுதவியால் ஊக்கமடைந்த சி.வை.தா, மேலும் சில நூல்களைப் பதிப்பிக்கத் தொடங்கினார். தொல்காப்பியப் பரிசோதனைக்காகப் பிரதிகள் தேடியபோது ஆறுமுகநாவலரின் கலித்தொகைப்

பிரதியொன்று அவர் கைக்குக் கிட்டியது. அதன் பெருமையினை யுணர்ந்து எவ்வாறாயினும் அதனைப் பதிப்பிக்க எண்ணியிருந்தனர். தொண்டைமான் புதுக்கோட்டை மகாராசாவின் மந்திரியாகிய அ. சேஷைய சாஸ்திரியவர்கள், சி.வை.தா. பழம்பெரு நூல்களைப் பதிப்பிப்பதில் மேற்கொண்ட இடர்களையும் பொருளிழப்பினையும் கண்டு அவரிடம் மிக்க அன்புடையவராய், சங்ககாலப் பேரிலக்கியங்களுள் ஒன்றைப் பதிப்பிக்கப் பொருளுதவி செய்வதாக ஒப்புக் கொண்டு உதவிசெய்தார். அதனடிப்படையில் கற்றறிந்தார் ஏத்தும் கலித்தொகையை, சி.வை.தா. தேர்ந்து பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்து ஸ்காட்டிஷ் அச்சகத்தில் பதிப்பித்தார்.

**8. இலக்கண விளக்கம்**

தொல்காப்பியம், வீரசோழியம், இறையனாரகப் பொருள் ஆகிய இலக்கண நூல்களைப் பதிப்பித்த சி.வை.தா. இலக்கண விளக்கத்தை 1889ஆம் ஆண்டு பதிப்புரையுடன் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். **குட்டித் தொல்காப்பியம்** என்னும் சிறப்புப் பெயர் உடைய இலக்கண விளக்கம் வைத்தியநாத நாவலர் என்பவரால் எழுதப்பட்டது.

**9. சூளாமணி**

பஞ்ச காவியங்களுள் சிறந்த சூளாமணி சி.வை.தா.வால் பதிப்பிக்கப்பட்டது. குணசாகர முனிவர் எழுதிய இந்நூலின் சிறப்பையும் தமது பதிப்புரையில் விளக்கியுள்ளார்.

**10. தொல்காப்பியம்–எழுத்ததிகாரம்–நச்சினார்க்கினியம்**

தொல்காப்பிய எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியர் உரையுடன் சி.வை.தா. 1891ஆம் ஆண்டு பதிப்பித்தார். 1848ஆம் ஆண்டு மழவை மகாலிங்கையர் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தைப் பதிப்பித்திருந்தார். அப்பதிப்பு சி.வை.தா. காலத்திலேயே அருகி விற்றமையால் மற்றொரு பதிப்பு அவசியமாயிற்று. அதனால் தொல்காப்பிய எழுத்ததிகாரத்தைப் பதிப்பித்தார். இப்பதிப்பை மட்டுமே சி.வை.தா. அவர்கள் பிறர் பதிப்பித்த நூலை மறு படியும் பதிப்பித்தது. மற்ற எல்லாப் பதிப்புகளும் சி.வை.தா. பதிப்பித்த முதல் புதிய பதிப்புகளே.

### 11. தொல்காப்பியம்–சொல்லதிகாரம் : நச்சினார்க்கினியம்

நன்றி கூறலும் விளம்பரமும் உடையதாகத் தொல்காப்பியம் - சொல்லதிகாரத்தை நச்சினார்க்கினியர் உரையுடன் சி.வை.தா. 1892ஆம் ஆண்டு விக்டோரியா ஜூபிலியந்திர சாலையில் பதிப்பித்தார். இந்நூலைப் பதிப்பித்ததால் தொல்காப்பிய எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் ஆகிய மூன்றிற்கும் நச்சினார்க்கினியருரையைப் பதிப்பித்த பெருமை சி.வை.தா.வைச் சார்ந்தது. இவையேயன்றித் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தைச் சேனாவரையருரையொடு பதிப்பித்ததையும் குறிக்க வேண்டும்.

### 12. அகநானூறு

சி.வை.தா. சென்னையில் 1897ஆம் ஆண்டு அகநானூற்றைத் தமிழ்ப் பண்டிதர் இருவரைக்கொண்டு பரிசோதித்துக் கொண்டுவரும் பொழுது 1894ஆம் ஆண்டு புறநானூற்றை, உ.வே.சாமிநாதையர் பதிப்பித்து விட்டார். அதனால் அதனை அறவே விடுத்து, அகநானூற்றை மணிமிடைப்பவளம்வரை பரிசோதித்தார். அப்பொழுது சி.வை.தா.வுக்கு உடல்நிலை மிகவும் பாதிக்கப்பட்டதாலும் வசன சூளாமணியை அச்சிடும் வேறொரு வேலையில் ஈடுபட்டிருந்தமையாலும் அகநானூற்றை முழுவதும் பரிசோதித்துப் பதிப்பித்தார். மணிமிடைப் பவளம்வரை 300 பாடல்கள் மட்டும் பரிசோதித்து வைத்தார்.

சி.வை.தா. மேற்கண்ட பதினொரு நூல்களைப் பதிப்பித்தார். அத்துடன் தாமாகச் சில நூல்களையும் எழுதி வெளியிட்டார்.

### சி.வை.தா. அவர்கள் எழுதிய நூல்கள்

சி.வை.தா. அரும்பாடுபட்டு அரிய நூல்களைப் பதிப்பித்ததோடு தாமும் ஒன்பது நூல்களை எழுதியுள்ளார். அவை:

1. கட்டளைக் கலித்துறை
2. சைவ மகத்துவம்

3. ஆறாம் வாசகப் புத்தகம்
4. ஏழாம் வாசகப் புத்தகம்
5. நட்சத்திரமாலை
6. ஆதியாகம கீர்த்தனம்
7. வசன சூளாமணி
8. விவிலிய விரோதம்
9. காந்தமலர் (அ) கற்பின் மாட்சி.

சி.வை.தா. அவர்கள் இயற்றிய ஒன்பது நூல்களும் ஒவ்வொரு விதத்தில் சிறப்புவாய்ந்தவை. அவற்றுள் மிகவும் போற்றப்பட வேண்டிய நூல் கட்டளைக் கலித்துறை. யாப்பருங்கலக்காரிகை, வீரசோழியம், களவியற்காரிகை, நவநீதப் பாட்டியல், வரையறுத்த பாட்டியல், பிரயோக விவேகம் முதலிய இலக்கண நூல்களும், கயாதரம் என்னும் நிகண்டு ஒன்றும், கோவை இலக்கிய நூல்களும், அந்தாதி, மாலை முதலிய பிரபந்தங்களும் கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்து சிறந்தன. கட்டளைக் கலித்துறையின் இலக்கணத்தை முழுமைப்பார்வையில் விளக்கும் நூலாக இது அமைந்துள்ளது. கலிப்பாவின் இனமான கலித்துறை இரண்டு பிரிவாகும். விருத்தக் கலித்துறை, கட்டளைக் கலித்துறை என இருவகையாகும். அவற்றுள் கட்டளைக் கலித்துறையைப்பற்றி விரிவாக இந்நூல் பேசுகின்றது.

**சி.வை.தா. அவர்கள் பதிப்பில் எதிர்கொண்ட சிக்கல்கள்**

சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்கள் பதிப்பித்த நூல்களைக் கொண்டும், அவற்றுக்கு அவர் எழுதியுள்ள அரிய பதிப்புரைகளைக் கொண்டும் அவர்தம் பதிப்பு முறையையும் அவர் எதிர்கொண்ட சிக்கல்களையும் அறியலாம்.

சி.வை.தா. 1853ஆம் ஆண்டு குமரகுருபரர் இயற்றிய நீதிநெறி விளக்கத்தைத் தாமே எழுதி எளிய உரையுடன் வெளியிட்டார். இதுவே இவர்தம் முதல் பதிப்புப் பணி. இந்நூல் வட்டுக்கோட்டை முத்துக்குமாரர் புதல்வர் சிதம்பரப்பிள்ளை, குமாரசுவாமி முதலியார் புதல்வர்

கதிரைவேற்பிள்ளை ஆகியோரால் பார்வையிடப்பட்டபின் பதிக்கப்பட்டது.

சி.வை.தா. அவர்கள் ஒவ்வொரு நூலையும் பதிப்பிக்கும் பொழுது பல இடர்ப்பாடுகளை எதிர் கொண்டார். பதிப்பிக்க ஏடுகளைக் கையில் எடுக்கிற போது ஓரம் தேய்ந்திருக்கும். கட்டுகளை அவிழ்க்கும்போது இதழ் முறிந்துப் போகும். ஏடுகளைப் புரட்டும்போது துண்டு துண்டாய்ப் பறந்துப்போகும். ஏடுகள் இப்படிஇருக்க, அதைப் படித்துப் பதிப்பிக்கலாம் என்றால் படிக்கிறபோது எழுத்துக்கள் வாலுந்தலையுமின்றிக் காணப்படும். இவற்றை யெல்லாம் எதிர்கொண்டு அதிகக் கவனம் செலுத்தி ஏடுகளை எடுத்துப் படித்துப் பதிப்பிக்கப்பட்ட சில நூல்களே இன்று அரிய நூல்களாயின. நைந்த நிலையிலிருக்கும் ஏடுகளைப் பதிப்பதே மிகவும் அரிய செயலாக இருந்தது. ஏடுகளை எடுத்துப் படிப்பதே கடினமான வேலையாக இருந்தது. அப்படியும் எடுத்துப் படிக்கிறபோது பிரதிகள் ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் ஓர் ஊருக்கும் மற்றொரு ஊருக்கும் மாறுபாடு உடையதாக விளங்கின. தொடர்புடைய பாடல்களைத் தேடிக் கண்டுபிடிக்கும் பொருட்டுப் பலநாட்டுப் பிரதிகளைச் சேகரிக்கும் போது மாறுபாடுகள் அதிகம் காணப்பட்டன. மதுரைப் பிரதி திருநெல்வேலிப் பிரதிக்கு வேறு. யாழ்ப்பாணத்துப் பிரதி இவ்இருதேசப் பிரதிகளுக்கும் வேறு. தஞ்சாவூர்ப் பிரதி முதன் மூன்றிற்கும் வேறு. சென்னைப் பட்டினப் பிரதிகள் இவையெல்லா வற்றிற்கும் வேறு. இவ்வாறு பிரதிகளிடையே வேறுபாடுகள் இருந்தமையால் தேடிக் கிடைக்கப்பெற்ற பிரதிகளைப் படித்துப் பொருள் பொருத்தம், நடைப்பொருத்தம், யாப்புப் பொருத்தம் உடைய பாடல்களை ஒன்றிணைத்து வரிசைப் படுத்தினார்.

பிரதிகளைப் படித்துத் திருத்துகிறபோது பொருள் குழப்பம் நேரும் வண்ணம் சொற்கள் எழுதப்பட்டிருப்பது- படித்துச் சரிசெய்யப் பெரிய இடர்ப்பாட்டை ஏற்படுத்தியது. சான்றாக,

மூன்று விரலைக் காட்டிக் கட்டிலிற் கால்போலப்
பஞ்சபாண்டவரையும் ஆறு கோணத்திலும் நிறுத்துக

என்ற வரிகளில் விரலை வாலென்றும், கட்டிலைக் கடாவென்றும் பஞ்சபாண்டவரைப் பிஞ்சுப் பாகற்காய் என்றும் மாற்றி எழுதி வைத்தால் அம்மொழியைச் சரிப்படுத்துதல் எத்தனை கடினம் என்பதைச் சி.வை.தா அவர்கள் தமது பதிப்புரையில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறெல்லாம் இடர்ப்பட்டு ஏடுகளைப் படித்து, சரிசெய்து நிரல் படுத்திய பிறகு தொடர்புடைய பாடல்களைத் தேடும் பணி அடுத்த நிலையில் செய்யப்பட்டது.

நூலாசிரியர், உரையாசிரியர், போதக ஆசிரியர் ஆகிய மூவரிலும் ஏடுகளைப் பதிப்பிக்கும் பரிசோதனாசிரியராகிய பதிப்பாசிரியர் மிகுந்த இடர்ப்பாடுகளை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. மேற்கூறிய முன்று ஆசிரியரின் அறிவு முழுவதும் பதிப்பாசிரியருக்கு வேண்டியிருந்தது.

> 'தூக்கினாலன்றோ தெரியுந் தலைச்சுமை? பரிசோதனாசிரியர் படுங்கஷ்டமும் ஓர் அரிய பழைய நூலைச் சுத்த மனச்சாட்சியோடு பரிசோதித்து அச்சிட்டார்களன்றி விளங்காது. இவையெல்லாம் அநுபவத்தாலன்றி அறியப் படாப் பொருள்கள்

என்று சி.வை.தா. அவர்கள் தமது பதிப்புரையில் கூறியுள்ளார்.

> ஒன்றற் கொன்று ஒவ்வாத இருபது இருபத்தைந்து பிரதிகளையும் அடுக்கி வைத்துக் கொண்டு என் கண் காணச் சிந்தாமணி பரிசோதனை செய்து பதிப்பித்த கும்பகோணம் வித்தியாசாலைத் தமிழ்ப் பண்டிதன் உ.வே.சாமிநாதையரைக் கேட்டால் இந்நால்வகையாசிரியர் பாட்டின் தாரதம்மியம் சற்றே தெரியலாம். எனக்கு அவரும் அவருக்கு நானுமேசாட்சி

என்றும் தாம் நூல்களைப் பதிப்பிக்கப் பட்டபாடுகளையும் எடுத்துரைத்துள்ளார்.

ஒருகாலை பரிசோதித்து அச்சிடுவதற்கு முதலில் கையெழுத்துப் பிரதிகள் சேகரிப்பதே மிகுந்த கடினமான செயலாகும். ஒருநூல் பழையதும் எளிதில் விளங்காததுமாய் இருக்கும். சில பிரதிகள் முதலுமின்றிக் கடைசியுமின்றிக் காணப்படும் குறைப் பிரதிகளாக இருக்கும். எழுத்துகள் சிதைந்து ஒரு பாட்டின் ஒருறுப்பாவது முற்றும் வாசிக்க முடியாமல் இருக்கும். மேலும் பெரும்பாலும் எழுத்துகள் சிதைந்து படிப்பதற்கே வெறுப்பை உண்டாக்கும். வேறுபிரதிகளைத் தேடிவாங்குதல் கடினமான ஒன்று.

கலித்தொகைப் பிரதிகள் சிதைந்து இருந்தமையால் வேறு ஏட்டுப்பிரதிகள் வைத்திருப்போருக்குக் கடிதங்கள் எழுதியும் கேட்டிருக்கிறார் சி.வை.தா. அவர்கள். அதற்கு வந்த மறுமொழியைப் பற்றியும் வேதனையுடன் தமது பதிப்புரையில் குறிப்பிடுகிறார். தாமாகச் சில நேரங்களில் ஏடுகளைத் தேடிச் சென்றபோது, அவர் பட்ட துன்பங்களையும் விவரித்துள்ளார்.

ஒருமுறை சி.வை.தா. அவர்கள் கடலூரில் சண்முக உபாத்தியாயரிடம் கலித்தொகைப் பிரதிகள் இருப்பதாக அறிந்து அங்குச் சென்றார். விசாரித்தபோதுஅவர் இடம்மாறி இருந்தார். அடுத்த ஊரில் இருப்பதாகக் கேள்வியுற்று அங்குச் சென்று அவரைச் சந்தித்த போது,

> ஏதோ ஒரு கட்டுச் சுவடிகள் பரம்பரையாக வைத்திருக்கிறோம். எமக்கு அவற்றின் பெயரும் தெரியாது. தங்களுக்கு வேண்டியதிருந்தால் பார்த்து எடுத்துக் கொள்ளலாம்

என்று கூறினார். அதுவும் கட்டளையுடன் ஏட்டுச் சுவடிகளைக் கொடுத்தனர்.

> ஏடுகள் இருந்த நிலைமை கண்டு யானுற்ற துன்பத்திற்கு என் விழியினின்று பெருகிய கண்ணீரே சாட்சி

என்று தமது பதிப்புரையில் சி.வை.தா குறிப்பிட்டுள்ளார். சென்னைப் பிராசிய கிரந்த மண்டபத்திலும் தஞ்சைச் சரஸ்வதி மகாலிலும் ஏடுகள் சிதறுண்ட நிலையில்

சிலவற்றைச் சேர்த்துக்கட்டி வைத்திருந்தார்கள். அமைப்புகளே இப்படி வைத்திருக்க, என்னவென்று தெரியாமல் ஏடுகளை வைத்திருக்கும் தனிநபர்கள் கோணிப்பைகளிலும் குதிர்களிலும் வைத்திருந்தமையால் அவற்றின் நிலை சொல்வதற்கரியது என்கிறார். ஏடுகளின் புறநிலை இவ்வாறிருக்க, சேகரித்த ஏடுகளின் அகநிலை அதைவிட மோசமான நிலையில் இருந்தது. பாடபேதங்கள் அதிகமாக இருந்தன. எழுத்துப் பிழைகள், சொல் மாறுபாடுகள், சீர்கள் மாறியவை, அடிகள் மாறியவை, பாடல்கள் மாறியவை, அதிகாரம் மாறியவை, உதாரணச் செய்யுட்கள் மாறியவை, மூலபாடல்களில் இவை போன்ற பாடபேதங்கள் இருக்க, உதாரணச் செய்யுள்களில் அதைவிட அதிகமான பாடபேதங்கள் காணப்பட்டன.

உதாரணச் செய்யுட்கள் ஒரே நூலிலிருந்து எடுத்துக் கையாளப்பட்டதாகச் சிலநேரங்களில் இருக்கும். சில இடங்களில் வெவ்வேறு நூல்களிலிருந்து எடுக்கப்பட்டதாக இருக்கும். இவற்றைக் கூர்ந்து கவனித்தாலன்றி விளங்காது. உதாரணச் செய்யுட்களைத் தேடி எடுத்து அவற்றைச் சரிபார்த்து வைத்தல் அது ஒரு மிகப்பெரிய பணியாக இருந்தது. சில உதாரணச் செய்யுள்கள் இக்காலத்து இல்லாததாக இருந்தால் என்ன செய்ய இயலும்? எப்படி சரிபார்க்க இயலும்?

இவையேயன்றி முதலும் ஈறும், ஈறும் முதலுமாகப் பல செய்யுள்கள் ஒரே தொடரால் வருவனவும் உள. இவற்றின் அடிமுடி தேடுவது சிவனுடைய அடிமுடி தேடிய பிரம்மா திருமாலின் நிலைபோல இருந்தது என்கிறார் சி.வை.தா. பெயரே அறியா நூல்களை எப்படி தேடுவது?

செய்யுள்களின் பாவகைகளும், பாவினமும் எவை எனத் தெரியாமல் இருந்தமை, அவ் இடரைக் களையக் கடிதமெழுதிப் புலவர்களைக் கேட்டமை, அதற்கு அவர்கள் தந்த விடை ஆகியன குறித்து வேதனையுடனும் எள்ளலுடனும் சி.வை.தா. குறிப்பிடுகின்றார். செய்யுள் முழுவதும் காட்டப்பட்டவற்றுள்ளும் இஃது இன்னபா இன்னபாவினமென்று நிச்சயிப்பதும் பல இடத்து மிக

அருமையாயின என்கின்றார். இவ்வாறு பாவினமெது என அறிய முடியாதபடி சுவடிகள், பதிப்போரைக் குழப்பும் எனில் மற்றொரு குழப்பம் ஏட்டிலுள்ள எழுத்துக்கள். மெய்ப்புள்ளி வைத்து மெய்யெழுத்தை எழுதார். காரணம், அப்புள்ளியை யிடும்போது பனையோலை பிளவுபட்டுக் கிழிய நேரிடும் என்பதற்காக.

மெய்ப்புள்ளி இல்லாததால் மெய்யெழுத்தா உயிர்மெய்யெழுத்தா என அறிய முடியாது. அதுவுமன்றி யெ, யே முதலாய கொம்பு எழுத்துகளுக்கு வேறுபாடு இராது. நகரத்திற்கும் கால் எழுத்திற்கும் கூட வேறுபாடின்றி எழுத்துகள் காணப்பெறும். இவற்றைப் படித்துப் பொருளுணர்ந்து, தக்க இடங்களில், தக்க சொற்களைப் பெய்து வாசித்தல் மிக அரிய செயல்.

தமக்குப் பொருள் விளங்காத இடங்களில் தக்க பொருளையுணராமல் பதிப்பித்தலை விடத் தக்கவர்களால் பொருளுணர்ந்து பதிப்பித்தல் சிறப்பு. அந்த வகையில் சி.வை.தா. தமக்குப் பொருள் விளங்காத பகுதிகளைத் தக்க புலவர்களிடம் கொண்டு சென்றும், கடிதம் எழுதியும் ஐயந்தீர்தலை மேற்கொண்டார்.

தமிழ் மொழியல்லாத பிறமொழியாகிய வடநூல் மேற்கோள்களில் ஐயம் நிகழ்ந்தபோது, வடநூற் பயிற்சியுடைய வடநூல் அறிஞர்களை நாடித் தமது ஐயத்தைத் தீர்த்துக்கொண்டு தமது பதிப்புப்பணியைச் செய்ததாக சி.வை.தா. அவர்கள் கூறுவார்கள். ஏடுகளைப் பதிப்பிப்பதற்கு அயராது உழைத்து, முயன்று சி.வை.தா. அவர்கள் பதிப்பித்த நூல்கள் பதினொன்று. மேலும் பதிப்பிக்க எண்ணியிருந்தவை அகநானூறு, புறநானூறு, பரிபாடல், தகடூர் யாத்திரை முதலாய நூல்கள். கலித்தொகையைப் பதிப்பித்துச் சங்க நூற் பதிப்புக்கு வழிகாட்டியுள்ளார் சி.வை.தா.

தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையர் உரையுடன் ஆறுமுக நாவலரின் துணைகொண்டு அச்சிட்டதுமன்றி, தொல்காப்பியம் முழுமையையும் நச்சினார்க்கினியருரையொடு பதிப்பித்து, தொல்காப்பியப் பதிப்பு முன்னோடியாகத் திகழ்கிறார் சி.வை.தா. இவையன்றி,

இவர் பதிப்பித்த இலக்கண நூல்களாகிய வீரசோழியம், இறையனராகப் பொருள், இலக்கண விளக்கம் ஆகிய யாவும் புத்தம்புதிய பதிப்புகளே. இவர் பதிப்பித்த இலக்கிய நூல்களான நீதிநெறி விளக்கம், தணிகைப் புராணம், சூளாமணி, முன்னர்க் கூறிய கலித்தொகை ஆகியனவும் முதன்முதல் பதிப்பிக்கப்பெற்ற நூல்களாகும். சி.வை.தா. அவர்களின் பதிப்புகளில் தொல்காப்பிய எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம் தவிர, பிற யாவும் சி.வை.தா.வே முதன் முதலில் பதிப்பித்தவை. பிறர் பதிப்பித்த நூல்களை எக்காரணம் கொண்டும் தாம் அச்சிடுவதில்லை என்ற கொள்கையைப் பதிப்புத் துறையில் கடைப்பிடித்தவர்; தொல்காப்பிய எழுத்ததிகாரப் பதிப்புரையில்,

> ஒரு முறையாயினும் பிறர் பிரசுரித்த நூல்களை
> மீள அச்சிடுவிக்காத எனக்கு இவ்வெழுத்ததிகாரம்
> ஒரு விலக்காயிற்று

என எழுதியுள்ளார். எனவே சி.வை.தா. பதிப்பித்த அனைத்து நூல்களுமே புத்தம் புதிய பதிப்புகளாகும்.

சி.வை.தா. தாம் பதிப்பித்த நூல்களின் கால வரையறையைச் சுட்டிச் செல்கின்றார். இது பதிப்பாசிரியர் குறிப்பிடவேண்டிய இன்றியமையாச் செய்தியாகும். சி.வை.தா. வீரசோழியம், தொல்காப்பியம், கலித்தொகை, சூளாமணி, இலக்கண விளக்கம் ஆகிய நூல்களின் காலத்தை வரையறுத்துக் கூறுவார். அவற்றை வலியுறுத்த சிற்சில சான்றுகளும் காட்டுவார். காட்டி, காரணகாரியத் தொடர்புடன் விளக்குவார். உதாரணமாக, வீரசோழியப் பதிப்புரையில் தமிழிலக்கிய வரலாற்றுக் காலங்களை வகைப்படுத்திக் கூறியபின்

> மேல் வகுத்த காலங்களுள் இந்நூலுடையார்
> காலம் சமணர் காலமென்று கொள்க

என்பார். அதனை வலியுறுத்த,

> 'வீரராசேந்திரன் எனவும், விக்கிரமச்
> சோழனெனவும் பெயர் வழங்கிய வீரசோழன்
> காலத்தில் அவன் கீழ்ப் பொன்பற்றி ஊரில்

> சிற்றரசுபுரிந்த புத்தமித்திரன் அரசனால் எழுதப்பட்ட அவ் வீரசோழனது பெயர் வாசிக்கப் பெற்றமையே இந்நூலெழுதி முன்பின் ஆயிரத்தைந்நூறு வருடம் சென்றிருத்தல் வேண்டும் என்பதற்குச் சான்றாகும்.

எனக் குறிப்பிடுவார். இவ்வாறாக ஒவ்வொரு நூலுக்கும் காரணகாரிய நிலையில் காலவரையறை செய்வார். அதைப்போன்றே நூலுக்கு உரையெழுதிய உரையாசிரியரைப் போற்றி அவர்தம் பெருமைகளை எடுத்து விளக்கியுள்ளார். நூல்களைப் பதிப்பிக்கும்போது பலர் சி.வை.தா.வுக்கு உதவி செய்தார்கள். மற்றும் பலர் உதவ மனமின்றி இருந்தனர். பணம் படைத்தவர்களுக்குத் தமிழ் நூல்களைப் பதிப்பிக்க மனம் வரவில்லையே என்றும் மனம் உடையவர்களிடம் பணம் இல்லையே என்றும் சி.வை.தா. ஏங்குகிறார்.

தொல்காப்பியம் பதிப்பிக்கும்போது அதனைப் பதிப்பிக்க எவ்வெந் நூல்களைக் கற்றவர் அந்நூலைப் பதிப்பிக்கத் தகுதியுடையவர் என்று கூறுவர். பஞ்சகாவியம், பஞ்சலக்கியம், அகநானூறு, புறநானூறு, நற்றிணை, கலித்தொகை, நெடுந்தொகை, குறுந்தொகை, திணைமரபு, செய்யுட்டொகை, கல்லாடம், பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, பரிபாடல், தகடூர் யாத்திரை, பெருவேந்தனார் பாரதம், பதினெண் கீழ்க்கணக்கு, வெண்பாமாலை யென்று இன்னோரன்ன இலக்கியங்கள், புறப்பொருள் பன்னிருபடலம், வையாபிகம், வாய்ப்பியம், அவினயம், காக்கைப் பாடினியம், நற்றத்தம், வாமனம், பல்காயம், பல்காப்பியம் என்று இன்னோரன்ன இலக்கணங்களும் முற்றக் கற்றவல்லோரே இந்நூலைப் பரிசோதித்தற்கு அருகராவர் என்கிறார்.

இவ்வாறு தாம் பதிப்பித்த பதினொரு நூல்களையும் சி.வை.தா. பல இடர்ப்பாடுகளுக்கு இடையில் முயன்று, கடுமையாக உழைத்து, கண்ணும் கருத்துமாக அக்கறையுடன் அரும்பாடுபட்டுப் பதிப்பித்தார்கள் என்பதை நாம் உணரலாம்.

நல்ல வித்துவான்களும் வீரசோழியம் என்னும் பெயரைக் கேட்டதன்றி, நூலைப் பார்த்தறியோம் எனப் பலபல சமயங்களில் நேருக்கு நேராகச் சொன்னார்கள். ஆதலால் அழிந்து இறந்துபோன நூல்களைப் போன்று வீரசோழியமும் ஆகிவிடுமோ என்று அஞ்சி, கிடைத்த வரைக்கும் அதனைக் காப்பாற்றுதலே சிறந்தது என்று நினைத்து வீரசோழியத்தைப் பதிப்பித்ததாகச் சி.வை.தா. கூறுவார். வீரசோழியப் பதிப்புரையில் தமக்கு உதவி செய்தவர்களை நன்றியோடு விளக்கி மகிழ்கின்றார். நூல் பயிற்சி இல்லாத எனக்குப் பொருள் விளங்கும்படி யாப்பலங்காரங்களில் வரும் அரிய சமஸ்கிருத விதிகளின் துணைகொண்டு உதவிய வேதாரணியாதீனம் கைலாயநாத சந்நிதிக்கும் சென்னைப்பட்டினம் பச்சையப்ப முதலியார் பாடசாலைச் சமஸ்கிருத பண்டிதராகிய ஸ்ரீமத் மண்டைக்குளத்தூர் கிருஷ்ண சாஸ்திரியாருக்கும் யாழ்ப்பாணம் நீர்வேனி மகாமக சிவசங். சிவபிரகாச பண்டிதருக்கும் மிக்க வந்தனம் சொல்லுகின்றேன் என்று வீரசோழியப்பதிப்புரையில் வீரசோழியம் பதிப்பிக்க உதவியவர்களை நினைத்து மகிழ்கின்றார்.

கலித்தொகைப் பதிப்புரையில்,

> கலித்தொகைப் பிரதிகள் தேட யான்பட்ட துன்பம் வாயினால் கூறும் அளவுரையதன்று. முதன்முதலில் யான் பார்த்தது புதுவை நயனப்ப முதலியாரது மூலபாடப் பிரதியாகும். அது தலையும் கடையுமின்றி இருந்த குறைப்பிரதி. மேலும் பெரும்பாலும் எழுத்துகள் சிதைந்து ஒருபாட்டின் ஓர் உறுப்பாவது முற்றும் வாசிக்க முடியாமல் கிடந்ததால் படிப்பதற்கே வெறுப்பு உண்டானது. பின்னர், தொல்காப்பியப் பரிசோதனைக்காகத் தேடிய போது ஆறுமுக நாவலரவர்கள் பிரதி சேர்க்கப்பட்டது. அதுகொண்டு கலித்தொகை அருமையுணர்ந்து அதனை எப்படியும் உலகிற்குப் பயன்பட ஆக்கிட

> வேண்டுமென்னும் விருப்பத்தினால் ஸ்ரீ ஆதீன மடாதிபதிகளுக்கு விண்ணப்பம் செய்து கொண்டேன். கருணையும் அன்புமே விதமாகக் கொண்டு விளங்கிய திருவாவடுதுறை சற்குருநாத சுவாமிகள்உடனே தங்கள் மடத்துப் பிரதியுடன் மேலும் இரண்டு பிரதிகளைத் தென் தேசத்திலிருந்து விடுவித்து அனுப்பியதோடு, அச்சிட்டபின் 20 பிரதிகளையும் எடுத்துக் கொள்வதாக ஒப்புக் கொண்டார்கள். இப் பெரிய உதவிக்கு யானே அங்கு அடிமையாவதன்றி வேறுயாது செய்தால் கைம்மாறாக முடியும்

என்று எழுதியுள்ளார். பதிப்புரையின் இறுதியில்,

> இந்நூலைப் பதிப்பிக்கும் பொருட்டு ஏட்டுப்பிரதியளித்த கனவான்களுக்கும் இதனைப் பரிசோதித்து அச்சிடுவதில் எனக்கு அப்போதப்போது சகாயம் செய்த ஸ்ரீமத் ந.க. சதாசிவப் பிள்ளையவர்களுக்கும் ஸ்ரீ யாழ்ப்பாணம் சிந்தாமணி உபாத்தியாயர் வேலுப்பிள்ளை அவர்களுக்கும் ஸ்ரீ நல்லூர் சிற். கைலாசபிள்ளை அவர்களுக்கும் ஸ்ரீ திருகோணமலை ந.க. கனகசுந்தரம் பிள்ளை அவர்களுக்கும் என் நன்றி கூறுகின்றேன் (ப. 34)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் இந்நூல் பதிப்பில் யாவர்க்காயினும் குற்றங்கூற விருப்பமிருந்தால், அவர்கள் இன்னும் அச்சில் ஏறாத நற்றிணை, பரிபாடல், அகம், புறம் என்று இவற்றில் ஒன்றைத் தாமாகப் பரிசோதித்து அச்சில் கொண்டுவந்து அதன் பிறகு குறை கூறும்படி வேண்டிக் கொள்கின்றேன். யான் பொருள், புகழ் இவற்றிற்காக இப்பணியைச் செய்யவில்லை' என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன் என்று கூறியுள்ளார். இவற்றை நோக்கும் போது பதிப்புப்பணியில் தாம் அடைந்த துன்பத்தை மற்றவர்கள் உணர வேண்டும் என்பதை உணர்த்துவதோடு

தமது நன்றி உணர்வையும் பிறர் அறியும்படி செய்துள்ளார் என்பதை அறியலாம்.

இலக்கண விளக்கம் பதிப்புரையில் தம்மை ஆதரித்து அச்சிடும்படி பொருள் உதவிசெய்து தம்மைப் போற்றிய போடிநாயக்கனூர் ஜாமின்தார் ஸ்ரீ திருமலை போடயகாமராச பாண்டியநாயக்கர் துரையவர்களுக்குப் பெரும் கடமைப்பட்டுள்ளேன் என்று குறிப்பிட்டுள்ளார். துரையவர்களின் வாய்மொழி தவறாது நிறைவேறச் செய்ய உடன்பட்டிருக்கும் அவர் தேவியார் முதலியோருக்கு மிகவும் வணக்கம் செலுத்துகிறேன் என்று சி.வை.தா. எழுதியுள்ளார்.

> எடுத்த முயற்சியில் யான் தளர்வடையாவண்ணம் அடிக்கடி என்னை உற்சாகப்படுத்திக் கொண்டிருக்குந் தொண்டமான் புதுக்கோட்டை இளவரசு இராஜா ஸ்ரீ பாலசுப்பிரமணிய ரகுநாத தொண்டமான் துரையவர்கள் பிரதிகாவலர் கௌரவ அ. சேஷைய சாஸ்திரிகள், மைசூர் நியாயாதிபதி கௌரவ அ. இராமச்சந்திர அய்யரவர்கள் முதலிய கனவான்களுக்கு, தென்தேசப் பிரதிகள் தேடி அழைப்பித்துத் தருவதில் அதிக அக்கறைகொண்ட மாஜி திருநெல்வேலி நீதிபதி மகாமகா ஸ்ரீ திரு. கனகசபை முதலியார் அவர்களுக்கு, இவ்வேலை விரைவில் நடைபெறும்படி, வேண்டிய ஒத்தாசைகள் செய்யும் ஸ்ரீமத் ந.க. சதாசிவம் பிள்ளையவர்கள், கோமகா ஸ்ரீ திரு. த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் அனைவர்க்கும் என் நன்றியைச் சொல்கிறேன்

என்று குறிப்பிட்டுள்ளார். அத்துடன்,

> சுவாமிகள் பட்டத்திற்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக மூர்த்திகள் செய்து வருவது போலவும் மற்றைத் தமிழ்நாட்டு ஆதீனங்களில் ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் மகாசந்நிதானங்கள் கைகொடுத்து வருவார்

களாயின் இன்னும் பல பண்டைக் காலத்துத் தமிழ் நூல்களை எடுத்துப் பரிசோதித்துப் பிரசுரிப்பதில் அதிகம் ஊக்கம் உடையவனாவேன் என்றும், சென்னைப் பாடசாலைக் கிரந்த சுதேச பாஷாவித்தியா பரிபாலன சபையார் எனக்குச் செய்து வரும் உதவி என்றும் என்னால் மறக்க முடியாதது

என்றும் குறிப்பிட்டுள்ளார்கள்.

சூளாமணிப் பதிப்புரையில்,

பிரதிகள் தேடிப் பரிசோதித்து இந்நூலைப் பதிப்பித்தற்கு உபயோகமான பொருளை அறங்கூனிலிருக்கும் என் சகோதரன் செல்வச் சிருஞ்சீவி இளைய தம்பிப்பிள்ளையும் அவரது நண்பர் சிலரும் சேர்ந்து அனுப்பிவைத்தார்கள். அவர்களைப் போலவே மகாமகா ஸ்ரீ தி.எம். குட்டியாபிள்ளையவர்கள் அறங்கூன் கமிசேரியட்நொட்டிச் சாலை மானேஜரவர் களுக்கும், அறங்கூன், கன்டிறோலர் ஆப் சுப்பரின்டெட்டன்ட் மகாமாஸ்ரீ ஏ. சரவண முதலியார் அவர்களுக்கும் கல்கத்தா ஹைகோர்ட் வக்கில் மகாமகா ஸ்ரீ நமசிவாய பிள்ளையவர் களுக்கும், அறங்கூன் கமிசேரியட் மானேஜர் மகாமக ஸ்ரீ பா. குப்புசாமி முதலியார் அவர்களுக்கும், அறங்கூன் கண்டிநாக்றர் மகாமகா ஸ்ரீ தி.வி. கிருஷ்ணசாமி நாயுடுகாரு அவர்களுக்கும், அறங்கூன் பர்மா ஸ்டேட் நேல்வே பொக்கிஷதாரர் மகாமா ஸ்ரீ வேதாசல முதலியாரவர்களுக்கும் அறங்கூன் பேப்பர் கறென்ஸி ஆபீசு, பொக்கிஷதாரர் மகாமகா ஸ்ரீ தி.எம். பொன்னுசாமிப் பிள்ளை அவர்களுக்கும், அறங்கூன் டிப்டி கம்மிஷனர் ஆபீசு ஹெட் அக்கவுண்டன்ட் மகாமகா ஸ்ரீ சி.வை. இளைய தம்பிப் பிள்ளையவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவர்கள் செய்த

> உதவியை யான் ஒருபோதும் மறக்கமாட்டேன். இவர்கள்செய்த உதவியைப் போன்றே இவர்கள் முன்மாதிரியைப் பின்பற்றி இன்னும் அநேகர் தத்தமக்கு ஏற்ற வித்துவான்களைக் கொண்டு பற்பல பழைய நூல்களை வெளிப்படுத்தி நிலைநிறுத்தக் கலைமகள் அருள்புரிவாளாக

என்றும் எழுதியுள்ளார்.

தொல்காப்பியம் எழுத்ததிகாரம் பதிப்புரையில்

> சென்னப்பட்டணம் வித்தியாசாலை விசாரணாதரிசி ஸ்ரீ பம்மல் விஜயரங்க முதலியார் அவர்களுக்கும் கொழும்பு சுப்ரீம்கோர்ட் அத்வக்காத் சி.பிறிந்நோதுரை அவர்களுக்கும், திருநெல்வேலி சப்கோர்ட் பழைய நீதிபதி ஸ்ரீ திரு. கனகசபை முதலியார் அவர்களுக்கும், சென்னப்பட்டணம் வித்தியாபரிபாலகரின் விசேஷ உபகிருதம் போதனாசிரிய வித்தியா சாலைப் பிரதம உபதேசகருமாகிய ஸ்ரீ யாழ்ப்பாணம் சிந்தாமணி வேலுப்பிள்ளை அவர்களுக்கும், பாலக்காடு நகராதிகார மந்திரம் மாகாண விசாரணைச் சபைகளில் ஒருவராகிய ஸ்ரீ ஐ. சின்னச்சாமி பிள்ளைக்கும்

நன்றியைத் தெரிவித்துள்ளார். தமக்குப் பொருள் உதவிசெய்தவர்களை நன்றியோடு நினைத்து வணங்குவதோடு அவர்களைப் போன்றே பிறரும் துணைநின்று தத்தமக்கு விருப்பமான அளவுக்குப் பொருள் கொடுத்து உதவி செய்வாராயின் எட்டுத்தொகை, தகடூர் யாத்திரை முதலியன விரைவில் வெளிவரும் என்றும்,

> எம் முயற்சிக்குத் துணைக்காரணம் பணம். அதன் குறைவினால் எனது முயற்சி மிகத் தாமதப்பட்டு செயல் தடைபடுகிறது. தான் விரும்பித் தொடங்கிச் செய்துவரும் இத்தொழிலைத் தற்காலம் சர்வகலா சோதனைச் சங்கத்தில் எனக்கு வரும் உதவித்தொகை ஒன்றைக் கொண்டே

> நடத்தி வருகின்றேன். அது பிரதிகள் தேடி அப்பப்போ யான் செல்லும் பிரயாணங்களுக்குப் பரிசோதனைச் செலவிற்குமே முன்னோ பின்னோ வென்று இருந்து வருகின்றது

என்றும் எழுதியுள்ளார்.

தொல்காப்பியச் சொல்லதிகாரப் பதிப்புரையில் தமக்குப் பொருள் உதவியும் பிற உதவிகளும் செய்தவர்களை நன்றியோடு நினைவுகூர்கிறார்.

> படிப்பாரும் எழுதுவாருமின்றிப் பணவாய்ப் பட்டுத் தேடுவாருந் தொடுவாருமின்றிச் செல்லுக்கிரையாகியும் காலத்தரத்தில் ஒன்றொன்றாய் அழிந்து போகும் பழைய தமிழ் நூல்களை இயன்றமட்டும் அச்சிட்டு நிலை நிறுத்தத் தொடங்கிய என் முயற்சிக்கு உதவியாக ஆங்காங்குள்ள தரும சீலர்கள், சென்ற வருடம் வைகாசி மாதம்வரையும் எனக்கு அவ்வப்பொழுது உபகரித்த பணத்தொகையைக் கலித்தொகை, தொல்காப்பிய எழுத்ததிகாரம் இவற்றின் பதிப்புரையிலே அவரவர் நாமதேயத்தோடு தெரிவித்திருக்கிறேன். அதன்பின்பு இரங்கூனிலே கடைவைத்திருக்கும் நாட்டுக் கோட்டைச் செட்டிப் பிள்ளைகளுள் ஸ்ரீ இராமநாதன் செட்டியென வழங்கப்பெற்ற மகாமகா ஸ்ரீ ரா.ம. சொ. சொக்கப்ப செட்டியார், ரூ.50 அனுப்பி வைத்தார்கள். அவரது தயாள குணத்தை என்றும் மிகுந்த நன்றியறிவுடன் பாராட்டுவேன் என்று குறிப்பிட்டுள்ளார். தருமச் செலவுகளில் இக்காலத்தில் அதிபிரதித்தியடைந்திருக்கும் நாட்டுக் கோட்டைச் செட்டிப் பிள்ளைகளில் வேறுபெயர்களும் இம் முன்மாதிரியை அனுசரித்து இப்படிப்பட்ட முயற்சியுடையவர் களுக்கும் ஒருவாறு துணைசெய்யும்படி அவர்கள் மனத்தில் எந்நாளும் குடிகொண்டிருக்கும் ஸ்ரீ

> நடேசப் பெருமான் அருள்புரியுமாறு அவரது திருவடிகளைப் பிரார்த்திக்கின்றேன்

எனவும் எழுதியுள்ளார்.

தொல்காப்பியப் பொருளதிகாரப் பதிப்புரையில்,

> இலக்கிய இலக்கணங்களில் வல்ல பெரியோர், இப்பதிப்பிலுள்ள குற்றங்களை அடியேனுக்குத் தெரிவிக்கும்படி பல முறையும் பிரார்த்திக் கின்றேன். அன்னோர் அறிவிக்கும் திருத்தங்களைத் திரட்டி இன்ன இன்ன வழு இன்ன இன்ன வித்துவான்களால் உணர்த்தப் பட்டனவென்று குறிப்பிட்டுத் தொல்காப்பியப் பதிப்புத் திருத்தம் என்றொன்று உடனே அச்சிட்டு வெளியிடக் காத்திருக்கின்றேன். ஐம்பது புதுத் திருத்தங்களுக்கு ஒரு பிரதி என நன்றியறிவிற்கோர் அடையாளமாக அனுப்புவேன். இந்நூல் பிழையற வழங்கச் செய்தல் ஓர் பெரும் உபகாரமென்று உணர்வாராக

என்று எழுதியுள்ளார்.

அத்துடன்,

> இதனைப் பதிப்பித்ததில் அச்சிற்கும் காகிதத்திற்கும் வந்த செலவினம் பரிசோதனைச் செலவு இருமடங்கிற்கு மேலே சென்றதாகலானும், இப்பெயர்ப் பட்டஅரிய நூல்களைப் படிக்க விரும்பி வாங்குவோர் சிலரேயாதலானும், இதுவித முயற்சியில் கையிடுவது, கைமுதலுக்கே நஷ்டத்தை விளைவிக்கின்றது. ஆதலால் தமிழ் விருத்தியில் அபிமானமுள்ள பொருட்செல்வர்களால் சிறிது சகாயம் பெற்றாலன்றி இன்னும் இதுபோல அழிகின்றதசையை அடைந்திருக்கும் அரிய கிரந்தங்களைப் பரிசோதித்துப் பதிப்பித்தலில் ஊக்கம் செல்லாது. இதுவரையும் அச்சுமணமும் பெறாத பூர்வ கிரந்தங்களைத் தேடிப் பதிப்பிக்கும் நோக்க முடையோற்குக் கல்வி அருமை அறிந்த

> திரவிய சீலர்கள் கைகொடுப்பார்களென்று நம்புகிறேன்

என்றும் எழுதியுள்ளார்.

> ஓரொருவர் ஓரொரு நூலைத் தமது செலவில் தமக்கு இனமான வித்துவான்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிடுவிப்பது தமிழ்த் தேசத்திற்கு எவ்வளவு பேருபகாரமாகும்? விளங்கும். எத்தனை அரிய நூல்கள் இறவாதொழியும்? அடியேன் வேண்டுகோளின்படி, முன்பு திருவனந்தபுர அரசற்கு மந்திரியாயிருந்த கனம் பொருந்திய ஸ்ரீமத் அ. சேஷைய சாஸ்திரியாரவர்கள் கலித்தொகையையும் கூடலூர் பிரபுக்களில் ஒருவரும் தர்மசீலருமாகிய ஸ்ரீமத் மஞ்சக்குப்பம் ராஜரத்தின முதலியாரவர்கள் தொல்காப்பியம் சொல்லதிகாரத்தை, நச்சினார்க்கினியர் உரையோடு தமது செலவாகப் பரிசோதித்துப் பதிப்பிக்கும்படி உத்தரவு செய்திருக்கின்றார்கள். இவர்கள் முன்மாதிரையைப் பிறரும் அனுஷ்டிப்பாராக. இதில் முந்தி நிற்க வேண்டியவர்கள் மடாதிபதிகள். இவர்கள் கருத்து இதில் செல்லுமாறு சரஸ்வதி கிருபை புரிவாளாக

என்கிறார்.

நான் பொருள் இலாபத்தைக் கருதி எப்பொழுதும் முயற்சி செய்யவில்லை. கைநஷ்டம் வராமல் இருப்பதொன்றே எனக்குப் போதும். இதுவரையில் பதிப்பித்த நூல்களால் எனக்குண்டான நஷ்டம் கொஞ்சமன்று. இந்நூலைப் பதிப்பித்தற்கு வேண்டிய காகிதத்திற்காகப் பொருள் உதவி செய்த கண்ணிய தருமசீலர் இருவர் உளர். அவர்களுக்கு மிக்க நன்றி கூறுகின்றேன் என்று எழுதியுள்ளார்.

சி.வை.தா.வின் முறைகள் சிறந்தவையாக இருந்தன. சான்றாக, தொல்காப்பியப் பொருளதிகாரப் பதிப்பு முறையைக் கூறலாம். தொல்காப்பியப் பொருளதிகரத்தை மூன்று பிரிவுகளாகப் பிரித்துப் பதிப்பித்தார். முதல் பகுதியில் அகத்திணையியல், புறத்திணையியல் இடம்பெற்றிருந்தன.

இரண்டாம் பகுதியில் களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமயியல் ஆகிய ஐந்து இயல்கள் இடம்பெற்றிருந்தன. மூன்றாம் பகுதியில் செய்யுளியல் மரபியல் இடம்பெற்றிருந்தன.

சி.வை.தா.வின் பதிப்பில் நூற்பா ஒருவகை எழுத்திலும், உரை பிறிதொருவகை எழுத்திலும் அச்சிடப்பெற்றுள்ளன. ஒவ்வொரு பக்கத்திலும் இடையிலும் ஒரு பக்கம் வெள்ளைத்தாள் வைத்து ஒருபக்கம் நூற்பகுதி இரு பக்கம் வெள்ளைத்தாள் என்று கட்டப்பட்டுள்ளது. இது நூலைப் படிப்போர் குறிப்புகளெழுதப் பயன்படும் என்ற நோக்கத்தாலோ அல்லது பக்கங்களைத் திருப்பும் போது விரைவில் கிழியாமலிருக்கும் நோக்கத்தாலோ அமைக்கப்பட்டிருக்கலாம். இந்நூலில் மட்டும் இம்முறை பின்பற்றப்பட்டுள்ளது.

**ஏடுகளின் நிலை**

> ஏடு எடுக்கும்போது ஓரஞ்சொரிகிறது. கட்டு அவிழ்க்கும்போது இதழ் முறிகிறது. ஒன்றைப் புரட்டும் போது துண்டு துண்டாய்ப் பறக்கிறது. இனி எழுத்துக்களோ வென்றால் வாலுந் தலையுமின்றி நாலாபுறமும் பாணக் கலப்பை மறுத்து உழுது கிடக்கின்றது.

தப்பின சில ஏடுகளே சரியாக உள்ளன என்று ஏடுகளின் நிலை குறித்து வருந்துகின்றார். மேற்கண்டவாறு நைந்த நிலையிலிருக்கும் ஏடுகளைப் பிரிப்பதே மிகவும் அரியசெயல். பிரதிகளின் ஏடுகளை ஒன்றைவிட்டொன்று பிரித்தெடுத்தலே பேரற்புதமாயிற்று என்றும் கூறுகின்றார். ஏடுகளின் புறநிலை இப்படியிருக்க, அவ்வேடுகளின் அகநிலை வழுக்கள் செறிந்தனவாய், சொற்கள் சிதைந்தனவாய், தொடர்கள் பிறழ்ந்தனவாய் அமைந்திருந்தன. இதற்கு மேலும் இத்தன்மையன என்று கூற இயலாதென்கிறார்.

ஏட்டுப் பிரதிகள் ஒரு நாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் ஓர் ஊருக்கும் மற்றொரு ஊருக்கும் மாறுபடும். ஒரு நாட்டில் வழங்கி வரும் பிரதிகளை மட்டும் பார்த்தவர்க்கு

இம்மாறுபாட்டின் பெருக்கம் தோன்றாது. ஏடுகளில் எழுதப்பட்டுள்ள வரிகள் ஒவ்வொன்றும் ஒரு விடுகதை போலத் தோன்றியது என்று கூறும்போது பதிப்பாசிரியர் படும்பாடு நமக்குத் தெளிவாகப் புலப்படுகின்றது. இத்தகைய இடர்ப்பாடுகளை அனுபவித்ததினால்தான் சி.வை.தா. தமது பதிப்பில் குறைகூறுவாருக்கு அறை கூவலை விடுகின்றார். பதிப்பிக்கப்பெறாத பிரதிகளான அகம், புறம் இவற்றைத் தாமாகப் பரிசோதித்து அச்சிட்டு வந்து அதன்பிறகு குறை கூறும்படி வேண்டிக் கொள்கிறேன் என்கிறார்.

சி.வை.தா. ஏட்டிலுள்ளவாறே பதிப்பித்தும், சில மாற்றங்களைச் செய்தும் பதிப்பித்துள்ளார். பாட்டைப் பொருள் அடிப்படையில் பிளவுபடவும், முதற் குறிப்பு எழுதியும், உரைபின்னே வருமாறு செய்தும், மூலம் உரை ஒரே இடத்தில் வருமாறு செய்தும், சில சொற்களை மாத்திரம் இடையில் சேர்த்தும், கால வரையறை செய்தும் பதிப்பித்துள்ளார்.

சி.வை.தா. தாம் பதிப்பித்த நூல்களின் பதிப்புரையில் எல்லாத் தமிழாசிரியரையும் வாழ்த்தியுள்ளார். இவர் தமிழுக்குச் செய்த தொண்டு யாவராலும் பாராட்டப் பெறும் சிறப்புடையது. தமிழ் மொழியிடம் பெரும்பற்றுடையவர். தமிழ்மொழியைப் புறக்கணிப்போரைக் கண்டிக்கும் இயல்பினர். கல்லூரிப் படிப்பிலே தமிழெடுத்துப் படிப்போருக்கு மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் தேர்வு நடத்தித் தேறியவர்களுக்குப் பரிசு தருவர். அவர்களை இவரும் வரவழைத்துக் கட்டுரை எழுதச்செய்தும், பாட்டு இயற்றப் பணித்தும், நேரில் உரையாடியும் திறமையறிந்து பரிசும் வாழ்த்தும் நல்குவார். அவ்வாறு பரிசு பெற்றவர்களில் தமிழறிஞர் வி.கோ.சூரிய நாராயண சாஸ்திரியார் ஒருவர். அப்பெரியார் இவரை,

> தாமோதரம் பிள்ளை சால்பெடுத்துச் சாற்ற எவர்
> தாமோ தரமுடையார்

எனப் பாராட்டியுள்ளார். சி.வை.தா. அவர்கள் செய்யுள் இயற்றுவதிலும் வல்லவர். தம் காலப் பெரியோர்களைப் பல

பாடல்களால் பாராட்டியுள்ளார். தாம் பதிப்பித்த நூல்களிலே தம் தமிழாசிரியர் வணக்கமாகப் பாட்டுக்கள் எழுதியுள்ளார்.

இவர் செய்த தமிழ்த் தொண்டுகளில் சிறந்தது தமிழ் நூல்களைப் பதிப்பித்தமையே. பல ஏடுகளை ஒப்பு நோக்கி, மிக முயன்று பாட வேறுபாட்டுடன் இவர் பதிப்பித்த நூல்கள் சிறந்த தமிழ் நூல்களாகும். இவருடைய பதிப்புரைகளிலும் முன்னுரைகளிலும் இவருடைய சிறந்த ஆராய்ச்சித் திறமும், திட்டநுட்பமும், உவமை முதலியஅணிகலன்களும் நகைச் சுவைகளும் இனிமையும் பொருந்திய உரைநடைத் திறனையும் காணலாம்.

இப்பெரியாராகிய சி.வை.தா. அவர்கள் அக்காலத்தில் திருவாவடுதுறை ஆதீனத் தலைவராக விளங்கிய சுப்பிரமணிய தேசிகரிடமும் டாக்டர் உ.வே.சாமிநாதையரிடமும் பூண்டி அரங்கநாத முதலியாரிடமும் வேதநாயகம் பிள்ளையிடமும் பெருநட்புடையவர். சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவரைக் கொண்டு யாழ்ப்பாணத்திலே கீரிமலையிலுள்ள சிவபிரான் மேல் நகுலேசருஞ்சல் என ஒரு நூலைச் செய்வித்து ஆண்டுதோறும் ஒரு விழா நடந்துவர மூலப் பொருளும் தந்தார்.

**செல்துளைத்த துணையன்றி மெய்ப்புள்ளி விரவாத**
**சென்னா ளேடு களாய்**
**ஓரஞ் சிதைந்தும் இதழ் ஒடிந்தும்**
**சீரழிந்து கெட்டுச் சிதைந்து நிரைமாறிப்**
**பேரழிந்து பூஞ்சுபிடித்துப் பிடியாகி -**
**முன்பின் முரணி முழுதும் புழுவுழுது -**
**கம்பைநடு முரிந்து கட்டுவிட்டுச் சிதறி -**
**மூலைக்கு மூலை மடங்கி முடங்கி,**
**எடுப்பாரும் அடுப்பாருமின்றி**
**மண்ணுக் கிரையாகிக் கிடந்தன**

இத்தன்மையில் இருந்த ஏடுகளை அச்சில் பதிப்பித்த சி.வை.தா.வைப் பற்றி வேதநாயகம் பிள்ளையவர்கள்,

**நீடிய சீர்பெறு தாமோதரமன்ன நீள்புவியில்**
**வாடிய சூழ்கள் மழைமுகங் கண்டென மாண்புற**

நீ பாடிய செய்யுளைப் பார்த்தின்ப வாரி படிந்தனன் யான்
கோடிப் புலவர்கள் கூடினும் நின்புகழ் கூறலரிதே

என்று போற்றுகின்றார். சி.வை.தா.வின் பெருமையையும் புலமையையும் திறமையையும் கருத்தில் கொண்டு அவருடைய சால்புடைமையைக் கண்ட சென்னை அரசாங்கம் கி.பி. 1875ஆம் ஆண்டு இராவ்பகதூர் (Rao Bahadur) என்னும் கண்ணியப்பட்டமை நல்கிக் கௌரவித்தது.

கம்பன் என்றொரு மானிடன் வாழ்ந்தது பற்றிப் பாடிய பாரதி சி.வை.தாமோதரம்பிள்ளை என்றொரு மகாவித்துவான் சென்னையில் இருந்ததுபற்றி எழுதியிருக்கின்றார். சூளாமணிக்கு அவர் எழுதிய முகவுரையைப் பற்றி விதந்து சுட்டியிருக்கின்றார். சி.வை.தா செயற்பட்ட பதிப்புக் களத்திலேயே செயல்பட்ட உ.வே.சா. இவருடன் நான் நெருங்கிப் பழகி இருக்கிறேன் என மகிழ்ச்சி பொங்க உரைத்திருக்கின்றார். தொல்காப்பியப் பொருளதிகாரம், இறையனார் அகப்பொருள், இலக்கணவிளக்கம், கலித்தொகை முதலியவற்றின் மூலங்களையும் உரைகளையும் பல ஏட்டுச் சுவடிகளைக் கொண்டு பரிசோதித்து முதன்முறை அச்சில் பதிப்பித்து வெளியிட்டவர் இவரே எனச் சி.வை.தா.வின் முன்னோடிப் பதிப்பியல் தலைமையையும் உ.வே.சா. மொழிந்திருக்கிறார். கோடிப் புலவர்கள் கூடினும் கூற அரிய புகழ் படைத்தவர் என வேதநாயகர் வியந்து பாராட்டுகிறார். திரு.வி.க. அவர்கள் பழந்தமிழ் இலக்கிய வெளியீட்டு நிலையத்துக்குச் சுவர் எழுப்பியவர் எனச் சி.வை.தா.வின் சீர் பரவுகின்றார்.

தமிழ் இலக்கண நூல்கள் சிலவற்றை அச்சுவாகனமேற்றி மக்களுக்குப் பயன்படச்செய்த பலருள் தலைசிறந்தவர் தாமோதரம்பிள்ளை என்று வித்தியானந்தம் மதிப்பிட்டுரைக்கின்றார். பதிப்புத் துறையில் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதி தாமோதரம்பிள்ளையின் காலமே என வரையறுக்கின்றார் கணபதிப்பிள்ளை. தன்னந்தனியராய்ப் பண்டைத்தமிழ்ச் செல்வப் புதையலைத் தமிழ் மக்களுக்கு அகழ்ந்தெடுத்து வழங்கப் பெருமுயற்சி மேற்கொண்ட பெருந்தகையாகச் சி.வை.தாவைக் காண்கின்றார்

வையாபுரிப்பிள்ளை. உன்னத பதிப்பாசிரிய இலக்கணங்கள் அனைத்தும் பொருந்தப்பெற்றவராகவும், மூலபாடத் திறனாய்வை முழுமையான ஆய்வுத் துறையாகக் கொண்டு செயற்பட்டவராகவும் சி.வை.தாமோதரம் பிள்ளையை ஆய்வுப் பார்வையில் அணுகி அறிவிக்கின்றார் க.கைலாசபதி.

மகாகவி பாரதி முதல் கைலாசபதிவரை தமிழுலகின் முதன்மையானவர்களால் சி.வை. தாமோதரம் பிள்ளையின் பதிப்புப் பணியின் முதன்மை காலந்தோறும் எடுத்துரைக்கப் பட்டு வந்திருக்கிறது என்று ய. மணிகண்டன் தமது கட்டளைக் கலித்துறை ஆய்வும் பதிப்பும் என்னும் நூலில் சி.வை.தா.பற்றிப் பல அறிஞர்களின் பாராட்டுரைகளை வெளியிட்டு மகிழ்கின்றார்.

அத்துடன், தமிழின் தொன்மையான இலக்கண நூல்களையெல்லாம் முதன்முறையாக ஓலைச் சுவடிகளிலிருந்து பதிப்பித்து அளித்த தலைசிறந்த பணியால், தமிழின் தொன்மையான இலக்கியங்களுள் ஒன்றான கற்றறிந்தார் ஏத்தும் கலியை முதன்முறையாகப் பதிப்பித்து வழங்கிய அணியால், தொல்காப்பியம் சொல்லதிகாரம் சேனாவரையம், பொருளதிகாரம் நச்சினார்க்கினியம் பேராசிரியம், எழுத்ததிகாரம் நச்சினார்க்கினியம், சொல்லதிகாரம் நச்சினார்க்கினியம், வீரசோழியம் உரையுடன், இலக்கண விளக்கம் உரையுடன், இறையனார் அகப்பொருள் உரையுடன் ஆகிய தமிழின் முதன்மையான இலக்கணங்களின் முதற்பதிப்புகள், முதன்மைப் பதிப்புகள் சி.வை.தா.வின் அருங்கொடை தமிழின் தொன்மை இலக்கியங்களான சங்க இலக்கியங்களுள் கலித்தொகை என்னும் இலக்கியத்தின் முதற்பதிப்பும் சி.வை.தா.வின் திருக்கொடை. அதனால்தான் சி.வை.தா. பதிப்பு முன்னோடியாக விளங்குகின்றார்.

சூளாமணி என்னும் காப்பியமும் தணிகைப் புராணம் என்னும் புராணமும் நீதிநெறி விளக்கம் என்னும் நீதி இலக்கியமும் சி.வை.தா.வின் பதிப்புத்திறத்தால் தமிழுலகில் பளிச்சிட்டவை. தமிழின் இன்றியமையா இலக்கண நூல்கள் நான்கினைத் தமக்குக் கிடைத்த உரைகளோடு முதன்முதலில் பதிப்பித்து வழங்கிய தலைசிறந்த பணியால் தமிழ்ப்

பதிப்புலகின் தலைசிறந்த இடத்தைச் சி.வை.தாமோதரம் பிள்ளை பெற்றுப் பொலிகின்றார் என்பது வரலாற்று உண்மை என்றும் ய. மணிகண்டன் தமது நூலில் சி.வை.தா. பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ் தந்த தாமோதரனார் என்றழைக்கப்படும் சி.வை. தாமோதரம் பிள்ளையை எடுத்துக் கொண்டால் அவரது பதிப்பு முயற்சிகளே நமக்கு நினைவு வரும். உ.வே.சாமிநாதையர்க்கு வழிகாட்டியாகவும் சில வழிகளில் அவரினும் மேம்பட்டவராகவும் விளங்கிய தாமோதரம் பிள்ளை முற்கூறிய போக்குகளின் சின்னமாக விளங்குகிறார் எனலாம். உதாரணமாக, வீரசோழியப் பதிப்புரையிலே அவர் தமிழிலக்கியச் சரிதத்தைக் கால முறைப்படி பாகுபாடு செய்ய முயன்றார். அபோதகாலம், அக்ஷரகாலம், சமண காலம், இதிகாச காலம், ஆதீன காலம் என எட்டுக் காலப் பிரிவுகளாய்த் தமிழிலக்கிய வரலாற்றை வகுத்தார். தமிழ் நாட்டில் மொழி வரலாறு, கல்லெழுத்தாய்வு, அகழாய்வு முதலியன ஓங்கி வளராத காலத்தில் வாழ்ந்தபோதும் பிள்ளையவர்கள் இத்தகைய கால ஆராய்ச்சியை மேற்கொண்டது பொதுப் போக்குகளின் தாக்கத்தினாலேயே என்பது கூறாமலே விளங்கும். இன்று தாமோதரம் பிள்ளை பதிப்புக்களையும் சாமிநாதையர் பதிப்புக்களையும் ஒப்புநோக்கி ஆராயும் வாய்ப்பு எமக்குண்டு. அவ்வாறு பார்க்கும் போது கால ஆராய்ச்சி, சரித்திரவுணர்வு, ஒப்பியல் நோக்கு, திறனாயும் தன்மை, ஆய்வறிவு நேர்மை, முறையியல் நுட்பம் ஆகியன ஐயரிலும் பார்க்கப் பிள்ளையிடத்து அதிகம் காணப்படுதல் தெளிவு.

சி.வை.தாமோதரம்பிள்ளை மூலபாடத் திறனாய்வை முழுமையான ஆய்வுத்துறையாகக் கொண்டு செயற்பட்டார். அனுபவ அறிவுக்கு அனுசரணையாக மூலப்பாடத் திறனாய்வுக் கொள்கைகளைக் கைக்கொண்டார். தாம் பதிப்பித்த நூல்களுக்கு அவர் எழுதிய நீண்ட பதிப்புரைகளைப் படிப்போர்க்கு பதிப்புக் கலையைப்பற்றி எத்துணை நுட்பமாகவும் விரிவாகவும் அவர் சிந்தித்துச் செயலாற்றினார் என்னும் உண்மை தெரியவரும்.

உன்னதப் பதிப்பாசிரியர் இலக்கணங்கள் அனைத்தும் அவரிடம் பொருந்தியிருக்கக் காணலாம். இதற்கு முக்கியக் காரணம் பிள்ளையவர்கள் இளமைக் காலத்தில் யாழ்ப்பாணக் கல்லூரியிலும் பின்னர்ச் சென்னைப் பல்கலைக் கழகச் சூழலில் ஆங்கில இலக்கிய ஆய்வாளர் தொடர்பாலும் பெற்ற மனப்பக்குவமே எனலாம். யாவற்றுக்கும் மேலாக 'ஆங்கிலம் கற்று மேனாட்டுக் கலைப்பண்பில் திளைத்துத் தம் தாய்மொழியாகிய தமிழ் மொழிக்குத்தொண்டு' புரியவேண்டும் என்ற அவருக்கு இருந்தமையும் குறிப்பிடத்தக்கதாகும் என்று க. கைலாசபதி ஈழத்து இலக்கிய முன்னோடிகள் என்ற நூலில் குறிப்பிட்டுள்ள செய்திகளையும் ய. மணிகண்டன் சுட்டுகின்றார். இத்தகைய தமிழ்ப்பணிகள் செய்த சி.வை.தா.வைத் தமிழ் உலகம் என்றும் மறக்க இயலாது.

# 3. பண்புநலன்

தமிழ்ப்பதிப்பு வரலாற்றின் முன்னோடியாகத் திகழ்ந்த சி.வை.தா. இலக்கண, இலக்கியப் புலமை உடையவர் மட்டுமின்றி ஆங்கிலப் புலமையும் ஆன்ற அறிவும் திறமையும் பெற்றவராகத் திகழ்ந்தார் என்று பல அறிஞர்களும் பாராட்டியுள்ளனர். அறிவு நிலையில் மட்டுமின்றிப் பண்பு நிலையிலும் சி.வை.தா. சிறந்தவராகத் திகழ்ந்தார். நடுவுநிலைமை தவறாதவராக விளங்கினார். அவர் வழக்கறிஞராகப் பணியாற்றிய போது நியாயமான வழக்குகளை மட்டுமே எடுத்து வாதிட்டார். எவ்வளவு பொருள் கிடைப்பதாக இருந்தாலும் அநீதிய வழக்குகளை அவர் எடுத்து நடத்த மறுத்துவிட்டார்.

**நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தற் பொருட்டு** (குறள்)

என்று வள்ளுவன் உரைப்பது போன்று சி.வை.தா. தமது நண்பர்களிடம் பழகினார். எவ்வளவுதான் நெருங்கிய நண்பர்களாக இருந்தாலும் அவர்கள் தவறு செய்கிற போது, தவறுகளைச் சுட்டிக்காட்டி நல்லறிவூட்டித் தேற்றும் குணம் படைத்தவர்கள். தம்முடைய வாழ்க்கை அனுபவத்தாலும் பட்டறிவாலும் தாம்கண்ட அறவழியைத் தமது நண்பர்களுக்கும் எடுத்துரைத்து வாழச் சொல்வதில் சி.வை.தா. வல்லவராக இருந்தார். தமிழ்ப்பற்றும் மனித நேயமும் உள்ளவராக விளங்கினார். பணியாற்றிய காலத்தில் பலராலும் பெரிதும் பாராட்டப்பட்டவர். அவ்வாறு தம்மைப் பலரும் பாராட்டியபோதும் அவர் பெரிதாக மகிழ்ந்து களி கூறவில்லை. ஒரு சிலர் அவரைக் குறை கூறியபோதும் அவர் பெரிதாக வருத்தப்படவில்லை. தமிழ் மொழியாம் பெரும் பற்றுடையவராகத் திகழ்ந்தார். தமிழ் மொழியைப் புறக்கணிப்போரைக் கண்டிக்கும் இயல்பினராக விளங்கினார்.

குடும்பச் சிக்கல்கள் ஒருபுறம் இருக்க, பதிப்புச் சிக்கல்கள் மறுபுறமிருக்க, இழப்புகளும் துன்பங்களும் வரிசையாக வந்து கொண்டிருந்த போதும், எல்லா நிலையிலும் அவமானங்கள் ஏற்பட்டபோதும் சி.வை.தா. மனம் கலங்கி ஓர் இடத்தில் அமர்ந்து விடவில்லை. தொடர்ந்து தமிழ்ப்பணியும் சமுதாயப் பணியும் செய்து வந்தார்.

அஞ்சாநெஞ்சமும் அயராத உழைப்பும் கொண்டவர் சி.வை.தா. அத்துடன் எதையும் தாங்கும் இதயம் படைத்தவராக விளங்கினார். தானும் தன் குடும்பமும் வறுமையில் வாடியபோதும், தம் குழந்தைகள் தொடர்ந்து காலமானபோதும் மனைவி இறந்தபோதும் அவருக்குச் சொல்ல முடியாத துன்பம் நேரிட்டது. கலங்கிய உள்ளம் உடையவராக இருந்தபோதும் கடமையை மறந்து விடாமல் துன்பத்தைத் துன்பத்தால் வெல்லும் திறனறிந்து தமது மனத்தைச் சமுதாயப் பணியிலும் பதிப்புப்பணியிலும் மாற்றிக் கொண்டார். சி.வை.தா. தமது வாழ்நாளில் பிறருக்கு உதவி செய்தாரே அன்றி ஒருவருக்கும் துன்பம் கொடுத்தது இல்லை.

தொடர்ந்து தமிழ்ப்பணியும் சமுதாயப்பணியும் செய்துவந்த சி.வை.தா. அவர்கள் 1.1.1901இல் காலமானார். தமது இறுதி நாளில் தம் நூல்களை எல்லாம் ஏலம்விட்டுத் தமது சொத்துடன் அவற்றைச் சேர்க்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார். இதனைப் பலர் தவறாகப் புரிந்து கொண்டு சி.வை.தா.வைச் சுயநலக்காரன் என்றனர். இந்த உலகில் பிறந்தவர்கள் அனைவரும் ஏதோ ஒருவிதத்தில் சுயநலக்காரர்களே. அத்துடன் எந்த ஒருவரையும் பற்றிப் பேசுகிறபோது குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிக்குள்ளதைக் கண்டு அதன்வழி பேசவேண்டும். அந்த வகையில் சி.வை.தா. தமிழ்ப் பணியும், சமுதாயப் பணியும் செய்து குன்றின் மேலிட்ட விளக்காகத் திகழ்கின்றார் என்பதில் ஐயமில்லை.

# துணை நூற்பட்டியல்

1. அருணாசலம், மு. தமிழ்இலக்கிய வரலாறு, 14ஆம் நூற்றாண்டு, காந்தி வித்தியாலயம், 1969.

2. இராஜரத்தினம், டி.ஏ. தாமோதரம் பிள்ளை சரித்திரம், ஆனந்த போதினி அச்சகம், சென்னை, 1934.

3. கோதண்டராமன், பொன் (பொற்கோ), உலகளாவிய நோக்கில் தமிழும் தமிழரும், மனோரமா இயர்புக், முதல் ஆண்டு வெளியீடு, கோட்டயம், 1991.

4. தாமரைக் கண்ணன், ப. ஈழத்தமிழறிஞர் தாமோதரம் பிள்ளை, குமரன் பப்பிளிஷர்ஸ், சென்னை, 2004.

5. தாமரைக் கண்ணன், ப. பதிப்புச் செம்மல், சி. வை. தாமோதரம் பிள்ளை, குமரன் பப்ளிஷர்ஸ், 2004.

6. விமலானந்தம், மது.ச. தமிழிலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1981.

7. வேலுப்பிள்ளை, ஆ. பதிப்புத்தமிழ் சி.வை.தாமோதரம் பிள்ளை, தற்காலத் தமிழ் முன்னோடிகள், பாரிநிலையம், சென்னை, 1975.

8. மணிகண்டன், ய சி.வை. தாமோதரம் பிள்ளை இயற்றிய கட்டளைக் கலித்துறை இலக்கண நூல், விழிகள் பதிப்பகம், சென்னை, 2005.

9. சி.வை. தாமோதரம்பிள்ளை (கட்டுரை), கலைக்களஞ்சியம், தொகுதி ஐந்து, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

# பின்னிணைப்பு

தமிழ்ப்பதிப்பு வரலாற்றில் ஈழத்தமிழறிஞர் சி.வை. தாமோதரம்பிள்ளை அவர்களின் பங்களிப்பு மிகப் பெரிதும் முதன்மையானதுமாகும். சி.வை.தா. அவர்கள் தாம் பதிப்பித்த நூல்களில் தாமே எழுதி வைத்துள்ள பதிப்புரைகளைத் தொகுத்து, 'தாமோதரம்' என்ற பெயரில் 1971ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்புவிற்பனைக் கழகத்தார் வெளியிட்டனர். "பதிப்புச்செம்மல் சி.வை. தாமோரதம் பிள்ளை" என்ற பெயரில் மறு ஆக்கம் செய்த சி.வை.தா.வின் பதிப்புரைகளை முனைவர் ப. தாமரைக்கண்ணன் அவர்கள் உதவியுடன் குமரன்·பப்ளிஷர்ஸ் வெளியிட்டுள்ளனர். இவற்றை அடியொற்றி அவற்றுள்ள பதிப்புரைகளுள் சில இங்கே பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

## தொல்காப்பியம் எழுத்ததிகாரம்

### பதிப்புரை

பேரருட் கயிலாய நாதப் பெருங்குரவன்
சீரடித்துணை விரத்தினிற் திருத்தி முத்துக்கு
மாரநற்கவி ராசனை வழுத்திமா லயனுந்
தேரகிற்றிலா நடேசாதான் சிந்தனை செய்வாம்

சங்கம் மரீஇய இலக்கியங்களுக் கெல்லாம் இலக்கணமாயுள்ளது தொல்காப்பியம். இதன் உணர்ச்சியில்லா அவ்இலக்கியங்களின் பொருட்முறைகளை நுண்மையாக உணரப் பெறார். ஆதலாற் றமிழாராய்ச்சியிற் புகுவோர்க்கு இந்நூல் இன்றியமையாப் பெருஞ் சிறப்புடையது. இஃது அகத்தியர் மாணாக்கர் பன்னிருவருட்டலைமை பெற்றவருந் திரண

தூமாக்கினியென்னும் இயற்பெயரினை உடையவருமாகிய தொல்காப்பிய மகரிஷியினாற் செய்யப்பட்டு எழுத்துச் சொற்பொருளென்னும் மூன்று அதிகாரங்கள் உடையது.

இதற்கு இளம்பூரணர், கல்லாடர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்று ஐவரால் உரையெழுதப்பட்டதாயினும், பூரண உரையாய் நமது காலம் வரைக்கும் வந்திருப்பது நச்சினார்க்கினியராற் செய்யப்பட்டது. ஒன்றுமே. அஃது ஆக்கியோன் பெயரினால் நச்சினார்க்கினியன் என வழங்கும். சேனாவரையர் சொல்லதிகாரத்திற்கு மாத்திரம் உரையிட்டனர். இளம்பூரணர் ஆதியுரையாசிரியராதலின் அவர்க்கு 'உரையாசிரிய' ரென்னுஞ் சிறப்புப் பெயர் கொடுத்தே யாருஞ் சுட்டுவர். அவர் உரையில் எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் பொருளதிகாரத்துச் செய்யுளியலும் ஒழிந்து எஞ்சிய பாகம் இக்காலத்து இறந்தது போலும். கல்லாடர் பேராசிரியர் உரைகளில் சிற்சில பின்னங்கள்மாத்திரம் இங்கும் அங்கும் சிதைந்து கிடக்கின்றன. யாதாயினும் ஓர் இயலுக்காவது பூரணமாயிருப்பது தெரியவில்லை. எழுத்ததிகாரத்திற்கு இளம்பூரணமுஞ் சொல்லதிகாரத்திற்குச் சேனாவரையருஞ் சிறந்தனவாயிருந்தன. ஆயினும் நச்சினார்க்கினியம் மூன்றதிகாரத்து உரையும் ஒருங்கே சிறப்பினையுடையதாய், அனைத்துரைகட்கும் பின்னாக எழுந்து, ஏனையோர் மதங்களை ஆங்காங்கு கண்டித்ததனால், அவ்வுரையே பிற்காலத்து அனைத்திலும் மேலாக உபயோகப் படுவதாயிற்று.

இதன் எழுத்ததிகாரவுரை சென்னப்பட்டணம் சர்வகலா சாலைத் தமிழ்ப் புலமை நடாத்திய மழைவை மகாலிங்கையரால் ஐம்பது வருஷத்தின் முன் அச்சிடுவிக்கப்பட்டிருந்தது. எழுத்திற்கு

இளம்பூரணமுஞ் சொல்லிற்குச் சேனாவரையமும் பின் அச்சாயின. ஆதலால் யாதோருரையாயினும் பிரசுரமாகாததும் எழுதுவாரும் படிப்பாருமின்றி மாரணதசை யடைந்ததுமான பொருளதிகாரத்தை முதலில் அச்சிடுவித்தல் அவசியமெனக்கண்டு அதனை நச்சினார்க்கினியருரையோடு சென்ற பார்த்திப வருடம் பதிப்பித்து வெளிப் படுத்தினேன். பின்னர்ச் சொல்லதிகாரத்தையும் அவருரையுடன் பதிப்பித்துவிட்டாற் தொல்காப்பியத்திற்கு அகப்படற்பாலிதாமென்று உட்கொண்டு, பலதேசத்தினின்றும் பிரதிகள் வரவழைத்துப் பரிசோதிக்கையில், என் இஷ்டர் அநேகர் சொல்லதிகாரம் பிரசுரமான பிரதி கிடையாதென்றும், அதனையும் யான் சேர்த்து அச்சிடாதொழியின், என் பிரதி வாங்குவோர் சொல்லும் பொருளும் பெற்றும் எழுத்தில்லாமற் தலையற்ற உடலையே தாங்கலாகுமென்றும், ஆதலால் எழுத்தையும் யானே சேர்த்து அச்சிடுதல் வேண்டுமென்றும் கட்டுரைத்தனர். அதனால் ஐயர் பதிப்புச் சென்னைப் பட்டணப் பிரதிகளின் வழிப்பட்டது நோக்கி, அதனைத் தென்தேசப் பிரதிகளோடும் பரிசோதித்து அச்சிடுவித்தனன்.

புதுக்கோட்டைச் சமஸ்தானம் மகா மன்றத்து நியாயாதிபதிகளில் ஒருவராகிய மகாமகாஸ்ரீம. அண்ணாமலைப் பிள்ளையவர்கள் இவ் எழுத்ததி காரத்தை அச்சிடுவதற்கு மிக்கத் திரவியோப காரஞ் செய்தனர். அவருடைய தயாள குணத்தையும் பிரபுத்துவத்தையும் அதிக நன்றியறிவோடு பாராட்டுகின்றேன்.

ஒருமுறையாயினும் பிறர் பிரசுரித்த நூல்களை மீள அச்சிடுவிக்காத எனக்கு இவ்எழுத்ததிகாரம் ஒருவிலக்காயிற்று. அன்றியும் ஒரு பெரு நூலின் முதலிலேயுள்ளதோர் சொற்பப் பாகத்தை மாத்திரம் ஒருவர் பிரசுரம் செய்து காலகதி

யடைந்து விட்டால், பின்னர் அந்நூல் முழுவதையும் அச்சிடுவோர் முதற் பாகத்தையும் சேர்த்து அச்சிடுதல் தவறன்றாம். உலக வழக்கமும் அதுவே.

இப்பொழுது நச்சினார்க்கினியம் சொல்லதி காரம் அச்சாகி வருகின்றது. எட்டுத்தொகை பரிசோதனை யிலிருக்கின்றது. இதில் புறநானூற்றுரை ஈற்றில் 140 செய்யுளும் பரிபாடல் பூரண பிரதியும் பதிற்றுப்பத்தில் முதற்பத்தும் கடைசிப்பத்தும் இன்னும் அகப்படவில்லை. இவற்றை வைத்திருக்கும் மகான்கள் யாவராயினும் சில நாளைக்கு அவற்றை இரவலாக அனுப்புவ ராயின் அவர்க்கு மிகக் கடமைப்படுவதுமின்றி அன்னோர் அனுப்பிய பிரதிகளோடுகூட எனது வழக்கப் பிரகாரம் இவ்இரண்டு அச்சுப் பிரதிகளும் அனுப்புவேன்.

தேடுவாரும் பரிபாலிப்பாருமின்றி ஒன்றொன்றாய் அழிந்துபோகும் அருமையான பழைய தமிழ் நூல்களைப் பாதுகாத்தற் பொருட்டு அடியேன் ஏட்டுப் பிரதிகள் தேடிப்பரிசோதித்து அச்சிடுவதில், புத்தகங்கள் விலை போகாமல் நேரிடும் நஷ்டத்தைக் குறித்து வருடம் ஆடிமாதம் ஹிந்து பத்திரிக்கை வாயிலாக ஓர் அபாயம் எழுதித் தமிழபிமானமும் தருமத்தையுமுடைய பிரபுக்கள் என் நஷ்டத்தை நன்கொடை முதலிய சகாயம் செய்து பரிசளிக்குமாறு வேண்டிக் கொண்டேன். அப்பொழுது எனக்குக் கைகொடுத்து உதவிசெய்த கனவான்களின் பெயரும் தொகைகளும் அடுத்த சர்வசித்து வருடம் ஆவணி மாதம் எனது கலித்தொகைப் பதிப்புரையில் காட்டியிருக்கின்றேன். அதன்பின்பு சில பிரபுக்கள் அளித்த உதவியையும் உலகிற்குத் தெரிவிப்பது என் கடனாதலின் அதனை ஈண்டுக் குறிக்கின்றனன்.

| | ரூ.பை. |
|---|---|
| சென்னப்பட்டணம் வித்தியாசாலை விசாரணாதரிசி ஸ்ரீ பம்மல் விஜயரங்க முதலியார் | 25.00 |
| கொழும்பு சுப்ரீம்கோட் அத்வக்காத் சி. பிறிந்நோ துரை | 75.00 |
| திருநெல்வேலி சப்கோர்ட் பழைய நீதிபதி ஸ்ரீ கனகசபை முதலியார் | 125.00 |
| சென்னப்பட்டணம் வித்தியா பரிபாலகரின் விசேஷஉபகிருதம் போதனாகிரிய வித்தியாசாலைப்பிரதம உபதேசகருமாகிய ஸ்ரீயாழ்ப்பாணம் சிந்தாமணி வேலுப்பிள்ளை | 100.00 |
| பாலக்காடு நகராதிகார மந்திரம் மாகாண விசாரணைச் சபைகளில் ஒருவராகிய ஸ்ரீ சின்னச்சாமி பிள்ளை | 25.00 |
| சென்னப்பட்டணம் பச்சையப்ப முதலியார் தருமபரிபாலன சபாபதி ஸ்ரீ பாளையம் சோமசுந்தரச் செட்டியார் | 100.00 |
| | ------- |
| | 450.00 |
| | ====== |

இம்மகான்களை யொப்பப் பிறரும் துணைநின்று தத்தமக்கு இஷ்டமான அளவுக்குத் திரவிய சகாயம் செய்வாராயின் எட்டுத்தொகை, தகடூர் யாத்திரை முதலியன விரைவில் வெளிவரும். எவ்வெவ் முயற்சிக்குந் துணைக் காரணம் பணம். அதன் குறைவினால் எனது முயற்சி மிகத் தாமசப்பட்டு நடைபெறுகின்றது. லோபோபகாரமாய் யான் கையிட்ட இத்தொழிலைத் தற்காலம் சர்வகலா சோதனைச் சங்கத்தில் எனக்கு வரும் பரீஷா நிவேதனம் ஒன்றைக் கொண்டே நடத்தி வருகின்றேன். அது பிரதிகள்தேடி அப்பப்போ யான் செல்லும் பிரயாணங்களுக்கும் பரிசோதனைச் செலவிற்குமே முன்னோ பின்னோவென்று சுட்டி வருகின்றது.

சென்னப்பட்டணம்
கர வருடம் வைகாசிமாதம்

இங்ஙனம்
சி.வை.தா.

(தொல்காப்பியம், எழுத்ததிகாரம்: மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியாருரை யோடும்; யாழ்ப்பாணம் சி.வை. தாமோதரம் பிள்ளையால் பல தேசப் பிரதிரூபங்களைக் கொண்டு பரிசோதித்து ஸ்ரீ தொண்டமான் புதுக்கோட்டை நியாயாதிபதி ம. அண்ணாமலைப் பிள்ளையவர்கள் திரவியோபகர சகாயத்தினால் சென்னப்பட்டணம் வித்தியாநு பாலன யந்திரசாலையில் பதிப்பிக்கப்பட்டது. கர வருடம் வைகாசிமாதம் (1891); இதன்விலை ரூ.150

## தொல்காப்பியம் சொல்லதிகாரம்

**நன்றிகூறல்**

படிப்பாரும் எழுதுவாருமின்றிப் பாணவாய்ப் பட்டுத் தேடுவாரும் தொடுவாருமின்றிச் செல்லுக்கிரையாகியும் காலாந்தரத்தில் ஒன்றொன்றாய் அழிந்துபோகும் பழைய தமிழ் நூல்களை இயன்ற மட்டும் அச்சிட்டு நிலைநிறுத்தத் தொடங்கிய என் முயற்சிக்கு உதவியாக ஆங்காங்குள்ள தரும சீலர்கள், சென்ற வருஷம் வைகாசி மாதம் வரையும் எனக்கு அவ்வப்பொழுது உபகரித்த பணத் தொகையைக் கலித்தொகை, தொல்காப்பிய எழுத்ததிகாரம் இவற்றின் பதிப்புரையிலே அவரவர் நாம தேயத்தோடு தெரிவித்திருக்கிறேன்.

அதன் பின்பு இரங்கூனிலே கடை வைத்திருக்கும் நாட்டுக்கோட்டைச் செட்டிப் பிள்ளைகளுள் ஸ்ரீ இராமநாதன் செட்டியென வழங்கப் பெயர்பெற்ற மகாமகா ஸ்ரீ ரா.ம.சொ.சொக்கப்பச் செட்டியார் ரூ.50.00 அனுப்பிவைத்தார் அவருடைய தயாள குணத்தை என்றும் மிகுந்த நன்றியறிவுடன் பாராட்டுவேன்.

தருமச் செலவுகளில் இக்காலத்தில் அதிபிரசித்தி யடைந்திருக்கும் நாட்டுக் கோட்டைச் செட்டிப் பிள்ளைகளில் வேறுபெயர்களும்

இம்முன்மாதிரியை அனுசரித்து இப்படிப்பட்ட முயற்சியுடையவர்களுக்கும் ஒருவாறு துணை செய்யும்படி அவர்கள் மனத்தில் எந்நாளும் குடிகொண்டிருக்கும் ஸ்ரீ நடேசப் பெருமான் அருள் புரியுமாறு அவரது திருவடிகளைப் பிரார்த்திக்கின்றேன்.

நந்தன வருடம் புரட்டாசி மாதம் சி.வை.தா.

(தொல்காப்பியம் சொல்லதிகாரம்; மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியாருரையோடும் பல தேசப்பிரதிரூபங்களைக் கொண்டு பரிசோதித்து, யாழ்ப்பாணம் சி.வை. தாமோதரம் பிள்ளையால் சென்னப் பட்டணம் விக்டோரியா ஜுபிலி யந்திரசாலையில் பதிக்கப் பட்டது.

**(நந்தன வருடம் புரட்டாசி மாதம் 1892 இதன் விலை ரூ.1.50)**

## தொல்காப்பியப் பொருளதிகாரம்

### பதிப்புரை

**யானை யனனனைத் தேனிமிர் கடம்பனை**
**வானமர் குழவியா லோனுறை சடையனை**
**இமய சிமிலமென் குமரியென் றமையும்**
**உமையைத் தமியேன் றமமலந் துமிப்ப**
**போத சற்குருவாய் மாதொரு பாகன்**
**வேத வனத்தெழூஉ மேதகு கயிலாய**
**நாத தேசிகன் பாதவருட் கொடுதொழீஇக்**
**கற்றறி வில்லாக் கடையனேன் றனக்கு**
**நற்றமிழ் கொளுத்திய நாவலன் சுன்னை**
**முத்துக் குமார வித்தக னடியிணை**
**சித்தத் திருத்திமற் றுத்தம் புலவர்**
**அடிக்கம லங்களென் முடிக்கணி கொடுக்கநின்(று)**
**அடியேன் கூறுவ(து) ஒன்றுளது**

உலகிலுள்ள கல்லெல்லாஞ் சாதி ரத்தினமாயின் அவை உயர்வுடையனவாமா? இழிந்தனவும் உளவாயினன்றே ஒழிந்தன உயர்வாவது? ஆதலாற் றம்உயர்வு விளங்குதற் பொருட்டாகவாவது என் புன்மொழியையும் பெரியோர்தம் பொன்மொழியினடுவே வைத்தலொழியாரெனத் துணிந்தனன்.

**வீங்கு கடலுடுத்த வியன்கண் ஞாலத்துத்**
**தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக்காகென**
**வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புக**
**ழானாப் பெருமை யகத்திய னென்னு**
**மருந்தவ முனிவ னாக்கிய முதனூல்**

எனப் புகழப்பெற்ற அகத்தியம், முதல் சங்கத்தார் காலத்தில் தொல்காப்பியத்தில் தலைமைப் பெற்றும், இடைச் சங்கத்தார் காலத்தில் இறந்துவிட்டது. அதன்பின் இதுவரைக்கும் தமிழுக்குப் பேரிலக்கணமாயுள்ளது தொல்காப்பியமே. இஃது அகத்தியர்பாற்றமிழ் நன்குணர்ந்த அவர் மாணாக்கர், திரணதூமாக்கினி, அதங்கோட்டாசான், துராலிங்கன், செம்பூட்சேய், வையாபிகள், பலகாப்பியன், பனம்பாரன், கழாரம்பன், அவினயன், காக்கைபாடினியன், நற்றந்தன், வாமனன் என்னும் பன்னிருவருள் முதன் மாணாக்கரென்று தம்மனோரனைவரானுந் துதிக்கப்பட்ட திரணதூமாக்கினி யென்னும் இயற் பெயரினையுடைய தொல்காப்பிய முனிவர் அருளிச் செய்தது.

அகத்தியர் மாணாக்கர் அனைவருள்ளும் இவரே மிகச் சிறந்தவரென்பது 'தொல்காப்பியன்ற னாணையிற் றமிழறிந் தோர்க்குக் கடன்' எனவும், அகத்தியரிடம் 'பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர் நல்லிசை நிறுத்த தொல்காப்பியன்' எனவும் பலகாப்பியத்தும் பன்னிருபடலத்தும் விதந்தோதப் பட்டமையானும், மற்றையோருட்

சிறந்த இவரோ டொருதலை அகத்தியனார் பொருட்டு முரணிய' அதங் கோட்டாசாற்கரிறபத் தெரிந்து' எனப் பனம்பாரனாரால் துதிக்கப் பட்டமையானும் உணர்க.

அகத்தியர் உத்தரதிசையினின்று நீங்கித் தெக்ஷணத்தில் வதிந்தபின் தமிழிற்கு இலக்கணம் செய்வான் கருதி, இயலிசை நாடகங்களில் ஆங்காங்குத் தமது ஆராய்ச்சியின் கண் எதிர்ந்தவாறே குறிக்கப்பட்ட விதிகளைப் பின்னர் ஒழுங்குதிரட்டி அகத்தியமெனப் பெயரிட்டுக் கொடுத்தனர். அது நெறிமுறைமைப்பட இயைக்கப்பட்டிலாது. இயலிசை நாடகத் தமிழ்களும் இயலுள்ளும் எழுத்துச் சொற்பொருள்களும் ஒருங்கு விரவிப் பெரிதும் பரந்துகிடந்ததோர் நூலாயிற்று. அதனை வெவ்வேறு பிரித்து அடைவுபடுத்தித் தொல்காப்பிய இயற்றமிழையும் பெருநாரை பெருங்குருகு முதலிய நூலுடையார் இசைத்தமிழையும் முறுவல் சயந்தங் குணநூல் செயிற்றிமென் றிவையுடையார் நாடகத் தமிழையும், வகுத்தும் விரித்தும் மயக்கற முறைகாட்டித் தத்தம் நூல் யாத்தனர்.

இவற்றுள்ளும் 'முந்துநூல் கண்டு முறைப்படவெண்ணி' 'மங்கா மரபி என முத்துமுறை காட்டி' ஐந்திர நிறைந்தொரு தொல்காப்பியத்தின் மாண்பு, இளங்கதிர் கான்றுதித்த பாலசூரியன் உச்சியடைந்து சொலித்தாற்போல வரவர அதிகரிக்கத் துரோக விடத்து முன்குலவிவிளங்கிய கிருபாசாரி யாஞ்ஞையையொத்து அகத்தியாப்பியாசங் குன்றினமையானுந் தவத்தான் மனந் தூயராய் முக் குணங்களையுங் கடந்து இறைவனருள் பெற்றுடையாராகிய தொல்காப்பியர் ஒருகாலத்துத் தமக்கு அகத்தியனாரால் வந்ததோர் மனத்தாபத்தினிமித்தம் இட்ட சாபத்தின்

வலிமையினாலும், அகத்தியம் இறந்துபோதக நேர்ந்தது. அல்லாக்கால் என்றென்றுஞ் சிரஞ்சீவியா யிருக்கப்பெற்றுள்ள அகத்தியனார் அருளிச்செய்த நூல் சங்கத்தார் காலத்திற்றானே வீழ்ந்துபோகாது. ஆசாரிய வழிப்பாட்டிற் குறைவில்லாத திரண தூமாக்கினி அவ்வாறு சபிக்கற்பாலரோ என்பாருமுளர். அஃதன்றே அவர் ஆசாரியரைச் சபியாது அவனாற் செய்யப்பட்ட நூலைச் சபித்ததென்க சீஷரது சாபத்தை ஆசாரியர் தடுக்க வன்மையிரோ வெனில் ரிஷிகள் சாபத்தைக் கடவுளர் தடுக்கும் வன்மையிலரெனின் இது கடாவன்றென மறிக்க.

பராக்கிரம பாண்டியனை வென்று துலுக்கர் முதன் முதல் மதுரையாண்டு எண்ணூற்றைம்பது வருடத்தின் மேலாயிற்று. சங்கத்தார் காலத்திற்கும் பராக்கிரம பாண்டியன் காலத்திற்கும் இடையிலே சோமசுந்தர பாண்டியன் முதலாக நாற்பத்திரண்டு அநுலோம பாண்டியர் அரசு செய்திருக்கின்றனர். ஆதலால் கடைச்சங்கம் ஒழிந்த காலம் இரண்டாயிரம் வருடத்தில் குறையாது.

முடத்திருமாறன் முதல் உக்கிரப் பெருவழுதியீறாகக் கடைச்சங்கம் இரீஇ நாற்பத் தொன்பதின்பர் பாண்டியர் அரசு புரிந்தகாலம் இரண்டாயிரம் வருஷமும், வெண்டேர்ச் செழியன் முதல முடத்திருமாறனீராக இடைச்சங்கம் இரீஇய ஐம்பத் தொன்பதின்மர் பாண்டியர் அரசு புரிந்தகாலம் மூவாயிரத்தைஞ்ஞூறு வருஷமுங், காய்சின வழுதி முதற் கடுங்கோன்வழுதியீறாக முதற்சங்கம் இரீஇய எண்பத் தொன்பதின்மர் பாண்டியர் அரசு புரிந்தகாலம் நாலாயிரத் தைந்நூறு வருஷமுமாம்.

ஆகவே முதல்சங்கத்திற்கு முன்னரே, முதனூல் கண்ட ஆசிரியர் அகத்தியனாரிடம் தமிழ்கற்று

அச் சங்கத்திற்றாமும் உடனிருந்து தமது நூல் நிலவச் செய்த திரணதூமாக்கினி முனிவர் தொல்காப்பியம் இயற்றிய பின்சென்ற காலம் எவ்விதத்தானும் பன்னீராயிரம் வருடத்தில் குறையாது. இக்கால விவரணம் வீரசோழியப் பதிப்புரையில் விரிவாக ஆசேக்ஷப நிவாரணத் தோடும் எழுதியிருக்கின்றேன்.

இவ்வாறு பன்னீராயிர வருஷ காலத்தில் மேற்பட்ட நிலைபெற்றோங்கித் தமிழ்க்கோர் தனிச்சுடர் போலப் பிரகாசித்து வந்த தொல்காப்பியமும் தற்காலத்து இலக்கணங் கற்போர் அனைவரும் அதன்வழித் தோன்றிய சிற்றிலக்கணங்களையே சற்று அம்மட்டோடு நிறுத்தி விடுதலால் எழுதுவாரும் படிப்பாருமின்றிப் பழம் பிரதிகளெல்லாம் பாணவாய்ப்பட்டுஞ் செல்லுக்கிரையாகியுஞ் சிதைவுபட்டுப் போக, யாவராயினும் ஒருவர் வாசிக்க விரும்பிய வழியுஞ் கிடைப்பது அருமையாய்விட்டது. தமிழ் நாடனைத்திலும் உள்ள தொல்காப்பியப் பொருளதிகாரப் பிரதிகள் இப்போது இருபது இருபத்தைந்திற்கு மேற்படா. அவையும் மிக்க ஈனஸ்திதி அடைந்திருப்பதால் இன்னும் சில வருஷத்துள் இறந்து விடுமென்று அஞ்சியே அதனை உலோகோபகரமாக அச்சிடலானேன்.

இந்நூற்கு உரையெழுதினோர் இளம்பூரணர் கல்லாடர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியார் ஐவர். இவருள் வடநூற்கடலை நிலைகண்டுணர்ந்த சேனாவரையர் சொல்லதிகாரம் ஒன்றற்கே மற்றை உரைகளினும் மிகச் சிறந்ததோர் உரையெழுதினர் இளம்பூரணர் பேராசிரியருரைகள் முழுவதும் இப்போது இல்லை. கல்லாடருரை மிகச் சுருங்கியது. நச்சினார்க்கினியாருரையே பிற்காலத்தது. பூரணமாகவும் விரிவாகவும்

உள்ளதும் பெரும்பாலும் ஓதிவரப்பெற்றதும் அஃதென்றே.

அது கடைச்சங்கத்தார் காலத்தின் பின் சமணர் தமிழ்ப் பரிபாலனம் செய்த காலத்துத் தோன்றியதாதலானும், நச்சினார்க்கினியாரும் பரிமேலழகரும் ஒரே காலத்தினராதலானும், இற்றைக்கு ஆயிரத்திருநூறு வருஷத்தின் முன்பு எழுதப்பட்டிருத்தல் வேண்டும். அன்றியுந் தமிழிற் சிறந்த இதிகாசங்களாகிய இராமாயணம் பாரதங் களினின்றும் பெருங்காப்பியமாகிய கந்தப் புராணத்தினின்றும் உதாரணங்கள் கொள்ளப் படாமையே இதற்குச் சான்றாகும். இவைகள் எழுதப்பட்டு ஆயிரத்திருநூறு வருஷஞ் சென்றமை யாவரானும் மறுக்கப்படாது.

சென்னப்பட்டணத்தில் இற்றைக்கு ஐம்பதறுபது வருஷத்தின் முன்னிருந்த வரதப்ப முதலியாரின் பின் எழுத்துஞ் சொல்லுமே யன்றித் தொல்காப்பியப் பொருளதிகாரத்தை உரையுதாரணங்களோடு பாடங் கேட்பவர்கள் மிக அருமை. முற்றாய் இல்லையென்றே சொல்லலாம். வரதப்ப முதலியார் காலத்திலும் தொல்காப்பியம் கற்றவர்கள் அருமையென்பது அவர் தந்தையார் வேங்கடாசாமி முதலியார்அதனைப் பாடங்கேட்கும் விருப்பமுடையரானபோது - பிறையூரிற் திருவாரூர் வடுகநாத தேசிகன் ஒருவரே தொல்காப்பியம் அறிந்தவர் இருக்கிறாரென்பது கேள்வியுற்றுத் தமது ஊரைவிட்டு அதிக திரவியச் செலவோடு அவ்விடம்போய் இரண்டு வருடமிருந்து பாடங்கேட்டு வந்தமையானும், வரதப்ப முதலியார் ஒருவரே பின்பு அதனைத் தந்தைபாற் கேட்டறிந்தவரென்பதனாலும் அதுகாரணமாக அவருக்குத் 'தொல்காப்பியம் வரதப்ப முதலி' யாரென்பது பெயர் வந்தமை யானும் பின்பு அவர்காலத்திருந்த வித்துவான்கள்

தமக்கு யாதாயினும் இலக்கண சமுயம் நிகழ்ந்து அவரையே வினவி நிவாரணம் செய்தமையானும் நிச்சயிக்கலாம்.

பொருளிலக்கண ஆராய்ச்சி குறைவுபட்டது தற்காலத்து மாத்திரமன்று. கடைச்சங்கத்தார் காலத்திலேயே உக்கிரப் பெருவழுதி 'நூல் வல்லாரைக் கொணர்கவென்று எல்லாப் பக்கமும்போக்க, எழுத்திகாரமும் சொல்லதி காரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து பொருளதிகாரம் வல்லாரை எங்கும் தலைப்பட்டிலேமென்று வந்தார். வர, அரசனும்புடைபடக் கவன்று என்னை எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே பொருளதிகாரம் பெறேமேயெனின் இவை பெற்றும் பெற்றிடுவோம். எனச் சொல்லி வருந்தினான்'' என்றும் மதுரை ஆலவாய் யெம்பெருமான் இறைவனார் அகப்பொருட் சூத்திரம் அறுப்தும் அருளிய வழியும் அவற்றின் பொருள் காண்பாரின்றி வருந்திக் கடவுளையே தன் சங்கத்தாரோடு சென்றிரந்து பொருள்காண வல்லானொருவனைப் பெற்றானென்றுஞ், சங்கப் புலவர் சிகாமணியாகிய நக்கீரர் வாயால் கூறப்பட்டுக் கிடக்கின்றதே பின்னை இக்காலத்து அதன் அருமை ஆச்சரியமாமா?

இந்நூலைப் பரிசோதித்து அச்சிட முயன்றபின் தமிழ் நாடுகள் ஆங்காங்குத் தேடிப் பல பிரதிகள் சம்பாதிப்பது பெரும் பிராயசையும் நெடுங்கால வேலையுமாயிற்று. இது தமிழ் நாட்டிற்கு ஒருபேருபகாரமான முயற்சியென்று கண்டு கைலாசபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மஹா சந்நிதானமுந் தம்மை அடைந்தோர்க்குப் பெருங்கருணைத் திருவுருவமாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகளுச் சைவ சமயாபிமானியுஞ் செந்தமிழ்ப் பரிபாலுகருமாகிய

ஸ்ரீமத் யாழ்ப்பாணம் ந.க.சதாசிவப்பிள்ளையைவர் களும், எனது அதி இஷ்டராகிய திருநெல்வேலித் தாசில்தார் ஸ்ரீ கணிதசிங்கம் வை. சின்னத்தம்பியா பிள்ளையவர்களும் பல பழைய ஏட்டுப் பிரதிகள் அழைப்பித்துத் தந்தனர். இவர்கள் செய்த நன்றியை எஞ்ஞான்றும் மறக்கற் பாலனல்லேன். இப்பிரதிகளோடு ஸ்ரீ திருத்தணிகைச் சரவணப் பெருபாளையர் பௌத்திரர் துரைசாமியையர் பிரதியொன்றும், புரசபாக்சம் ஸ்ரீ சாமுவேற் பண்டிதரவர்கள் தமது சொந்தக் கையினாலே எழுதிவைத்திருந்த பிரதி ஒன்றும், அடியேன் வசமிருந்த தொல்காப்பியம் வரதப்ப முதலியார் பிரதியொன்றும், மதுரைப் பிரதியொன்றுஞ் சேர்த்து இவற்றுள் திருநெல்வேலிப் பிரதி இரண்டு, மதுரைப் பிரதி இரண்டு, தஞ்சாவூர்ப் பிரதி மூன்று சேர்த்து இவற்றுள்ளே, திருநெல்வேலிப் பிரதி மூன்று, சென்னப் பட்டணம் பிரதிமூன்று, யாழ்ப்பாணப் பிரதி இரண்டாகப் பன்னிரண்டு பிரதி கொண்டு பரிசோதித்து என் விருப்பத்தை ஒருவாறு நிறைவேற்றினேன்.

ஆயினும் இஃது இப்போது வழுவறப் பிரசுரம் செய்யப்பட்டதென்று கொள்ளற்க. எனக்குச் சந்தேகம் பிறந்து யெல்லாந் தற்காலத்துப் பெயர் போந்த வித்துவான்களாயும், போர் பலரையும் வினவியும் அயனூற்றுணிபுகள் மேற்கோள் களோடு சீர்தூக்கி இன்னும் ஐயமறுத்துக் கொள்ளாத இடங்கள் அநேகம் உள. அவைக்ளைக் கூடிய மாத்திரம் பிரதிகளிலிருந்தவாறு அச்சிடுவித்தனன். ஆயினும் பொருட்டொகுதி பொருட்டொகுதி பேரர் உட்டொகுதி பேர்அருட்டொகுதி, பேரருட்டேர்குதி, பொருட்டேர்குதி, பொருட் டொகுதி என்றத்றொடக்கத்தனவாய் இன்னும் பல பாடபேதமாகப் படித்தற்கிடம்பெற்றுப் பொருட்டொகுதி என்றெழுதிக் கிடந்த

தொன்றையான் அவற்றுள் ஒன்றாக என் சிற்றறிவு சென்றவழிக் குறிப்பிட்டுப் பதிப்பித்தமை பற்றி அதுவே பாடமேன்று நிச்சயிக்கற்க. சமுதாய நிகழ்வுழியெல்லாம் சந்தியை மீளவும் இலக்கணப் பிரகாரம் புணர்த்துத் தீர்க்க பேதத்தையும் புண்ணியையும் நீக்கிப் பாடபேதப்படுத்திப் பார்க்குமாறு வேண்டிக் கொள்கிறேன்.

சம்பளத்திற்காக ஏடெழுதுவோருடைய சாதாரண கல்வித் திறமையையும் எழுத எழுத வழுக்கள் அதிகப்படும் விதத்தையும் பழைய காலத்து ஏட்டுப் பிரதிகள் அடைந்திருக்கும் ஈன ஸ்திதியையும், பாடம் கேட்டார் இல்லாத தன்மையையும் நோக்கில், அநேக வித்துவான்களாய் ஒருசபை சேர்த்து ஒருவரோ டொருவர் தீர்க்க ஆலோசனை செய்து பதிப்பினும் பல வழுக்கள் புகுதற்கிடைனாய இவ்அரிய நூலை, யான் ஒருவனாய்ப் பரிசோதித்துப் பிரசுரம் செய்தமையால் இடமிடந் தோறும் பலபல வழுக்கள் செறிந்திருத்தல் இன்றிமையமையாம்.

ஐயந்திரிபறத் தாங்கற்றறியாததோர் நூலை இவர் இங்ஙனம் வழுவுற அச்சிட வேண்டிய தென்னை யெனயாரும் விளைவராயின், வழுச்செறிந்த தாயினும் அடியோடழிந்து போகின்ற நூலை அடியேன் பாதுகாத்தது பேருபகரமன்றோ என்க. மேலும் இதனை உரை உதாரணங்களோடு பாடங்கேட்டவர் யாராவது உளராயினரோ அவராயின்றியான் செய்தது தவறாவது ? யார் செய்யினும் இதுவே முடிவாயின் அடயேன்மேற் குறைகூறுதல் தர்மமன்று.

அன்றியும் சும்மாகிடந்த அம்மையாருக்கு அரைப்பணத் தாலி போதாதா? காண்டதற்கும் அரிய நுலைக்கைக்கெட்டப் பண்ணினது கேடாமா? பிரதி கிடைப்பதே மிக அருமையாயும். கிடைப்பினும் குறைப் பிரதிகளாகவும் அவை

தாமும் ஒரோவோரு வரிக்குப் பல வழுவாக ஆயிரக்கணக்கான வழு உடையனவாகவும் இருக்க, அடியேன் அவ்வழுத் தொகையைக் குறைத்து நூற்றுக்கணக்காக்கிவிட்டதா என்மேற்குறை யாயிற்று.

அங்ஙனமாயின் இவரினம் வல்லோராய் இன்னும் அநேக வழுக்கள் குறையப் பிரசுரம் செய்யத்தக்க வித்துவான்கள் இந்நூலை அச்சிட விரும்பியதும், முயன்றதும், இரண்டதொரு பிரதிகள் தேடிப் பார்வையிட்டதும் தமக்கு நிகழ்ந்த சந்தேகங்களால் இதனை அச்சிடிற்றம் பெயர்க்குக் குறைவு நேரிடுமென்று தம் முயற்சியைக் கைவிட்டதும் அடியேன் பூரணமாக அறிவேன். அதுலாந் பண்டிதர் கவிராஜபண்டிதர் மாறா வித்துவான் புலவரென்றின பெரும் பட்டச் சுமையைத் தலைமேலேற்றிக் கொள்ளாது இன்னும் பலகாலந் தமிழ் படித்தற்குரிமைபூண்டு நிற்கும் என்போலியரே இதிற் கையிடுவது பேரவசியமாயிற்று.

பஞ்சகாவியம், பஞ்சலக்கியம், அகநானூறு, புறநானூறு, நற்றிணை, கலித்தொகை, குறுந்தொகை, திணைமரபு செய்யுட் டொகைக் கல்வியாம் பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, பரிபாடல் தகடூர்யாத்திரை, பெருந்தேவனார் பாரதம், பதினெண் கீழ்க்கணக்கு, வெண்பாமாலை யொன்று இன்னோரன்ன இலக்கியங்களும் புறப்பொருட் பன்னிருபடலம் வையாயுகம் வாய்ப்பியம் அவ்வியம் காக்கைப்பாடினியம், நற்றத்தம் வாமனம் பல்காலம் பல்காப்பியமென்று இன்னோரன்ன இலக்கணங்களும் முற்றக் கற்று வல்லோரே இந்நூலைப் பரிசோதித்தற்கு அருகராவர். அப்படிச் சிறந்துளோர் தற்காலிக நிலையரென்பதுயான் கூறவேண்டியதில்லை.

"விடியலவெங்கதிர் காயும் வெயமல கலறை" என்னும் வாக்கியத்தையும் ஓர் பரிபாடற் செய்யுளையும் சரியாய்ப் பிரித்துணர்தற்கு எத்தனை புலவரிடம் கொண்டுதிரிந்தேன்" எத்தனை வித்துவான்களுக்குக் கடிதமெழுதிக் கைசலித்தேன்? எனக்கு வந்த மறுமொழிகளை வெளியிட்டுச் சொன்னால் மிகவும் வெட்கக் கேடென்றறிக. அவை ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமான் மகத்துவத்தை நன்கு விளக்கின.

மேலும், சரகத்தைச் சாகமென்னும், அளபை அன்பென்றும், இதர விதரத்தை இதா விதாவென்றும், திகந்தராளத்தைத் திகந்தாரள மென்றும், மென்மையை மேன்மையென்றும்தார நிலையைத் தபுதரா நிலையென்றும் மூதலவன் என்பதை முதல்வனென்றும் இன்னும் பலவாறாக மயங்கினோர் பெயர்பெற்ற வித்துவான்களே யாதலின் ஏட்டுப் பிரதியோடு ஊடாடிய சிரேஷ்ட புலவர்கள் அடியேன் தவறுகளைப் பாராட்டாது பொறுத்தருளுவதுமன்றி இன்னும் இம்முயற்சியை வியந்து கொள்வார்களென்பதில் சந்தேகமில்லை. ஏடுபிடித்து வாசிக்க அறியாத அச்சுப்பிரதி வித்துவான்களும், தமதகத்து மெய்ப்பெருமை யொன்றிலராய்ப் பிறரைக் குறைத்தூற்ற லாற்றாற் நிறைவுடையார்போலத் தோற்றலாமென மயங்கும்போலி வித்துவான்களுமே இவ்வித வழுக்களைக் குறித்து என்னை இகழ்வர். எனக்கு அது குறைவன்று. இவர் கூற்றைப் பெரியோரும் கவனியார்.

குறை கூற இஷ்டமுள்ளவர்கள் இன்னும் அச்சிலே தோற்றாதனவாய், அடியேன் காட்டுங் கிரந்தங்களில் இரண்டொரு ஏட்டையாயினும் எழுத்துப் பிழையற மாத்திரம் வாசித்துக் காட்டுவாராயின் அவர்கள் பாதாம்புயத்தை உச்சிமேற்சூடி அவர்கட்குத் தொண்டு

பூண்டொழுகுவேனென்று அறிந்தவராகுக. ஏடு கையிற் பிடித்தவுடன் அதன் எழுத்துத் தேகவியோகமான தந்தை கையெழுத்துப் போற் தோன்றிற்றென்று கண்ணீர் பெருக அழுதகதையு முண்டன்றோ.

காலாந்தரத்தில் நூல்களும் செய்யுட்களும் அடைந்திருக்கும் மாறுபாடு இவ்வளவிற் றெனற்பாலதன்று. கம்பர் சேர தேசத்திலிருந்து வரும் வழியில், பாலைக்காட்டிலே, சிலர் செய்த இராமாயணப் பிரசங்கத்தைக் கேட்டபோது, தமது பாட்டுக்களும் இடைக்கிடை வருவனவாகச் சொல்லிய கதைகேள்வியுற்றிருக்கலாமே.

**அடிசிற் கினியாளே ஆக்கஞ் செய்வாளே**
**படிசொற் கடவாத பாவாய் - அடிவருடிப்**
**பின்றூங்கி முன்னெழூஉம் பேதையே! போதியோ,**
**வென்றூங்கு மென்கண் ணினி?**

எனத் திருவள்ளுவ நாயனார் சொல்லியதாக இக்காலத்து வழங்கும் பாட்டும், நமது உரையாசிரியர் தமது காலத்து வழங்கியபடி எழுதியிருக்கும்.

**அடிசிற் கினியாளை, அன்புடை யாளைப்**
**படுசொற் பழிநாணு வாளை - யடிவருடிப்**
**பின்றூங்கி முன்னுணரும் பேதையை, யான்பிரிந்தா வென்றூங்கு மென்க ணெனக்கு**

என்பதற்கும் எவ்வளவு பேதம்!

அடித்தொகை சீர்த்தொகைகள் மாறுபட்டுப் பாவேறுபட்டுப் போயினவும் அநேகம் உள. இப்போது அறுசீரடியாசிரிய விருத்தமாக வழங்குகின்ற

முன்னைத் தஞ்சிற்றின் முழங்குகடலோத
மூழ்கிப் பெயர,
வன்னைக் குரைப்பனறிவாய் கடலேயென்
றலறிப் பெயருந்,
தன்மை மடவார் தணந்துகுத்த வெண்முத்தந்
தகைசால் கானற்,
புன்னை யரும்பென்னப் போவாரைப்
பேதுறுக்கும்
புகாரே யெம்மூர்!

என்னும் புகார்ச் சிறப்பை ஆசிரியர் மூன்றாம் அடி நான்குசீரே யுடையதாக வேறுபாவின் பாற்படுத்தி உதாரணம் காட்டினார். இவ்வாறு மாறுபட்ட செய்யுட்கள் அநேகம் உரையகத்து ஆங்காங்குக் காணப்படும். அவைகள் ஆசிரியர் காலத்திற்கு முன்னர்த்தானே எத்துணைத் திரிபடைந்தனவோ? இனி இவற்றின் பூர்வ சொரூபம் நிச்சயித்தல் யார்க்கும் அரிது அரிது.

இந்நூலின் இயலடைவுகளேயன்றி அதிகாரத் தொகை தானும் உரையாசியர் காலத்திற்கு முன்னரே பிறழ்ந்து போயின. அவையிற்றை ஆசிரியர் பலவிடத்தும் குறித்த கண்டனைகளா லுணர்க.

உரையாசிரியர் காட்டிய உதாரணச் செய்யுட்களிற் தற்காலத்திலுள்ள வில்லங்கத்தைக் குறித்துஞ் சில மொழிசொல்வதுயான் அவற்றோடு பட்ட பிரயாசத்தை ஒருவாறு விளக்கும்.

"விண்டு தாங்குகைம் மேலையோன் மால்வரை சென்றான்'' எனவும்''வாம்பெருந்திரை வளாகமென்மொழிய செவ்வழியாழ்'' எனவும் மோனையும் தவறாது அடியளவும் விகாரப்படாது இடண்டு உதாரணம் குறிக்கப்படுமாயின், இவற்றை ஒன்றொன்று ஒரோவொரு செய்யுளின்

முதலும் ஈறுமென்பது அச்செய்யுட்களைக் கந்தபுராணத்திலும் பெரிய புராணத்திலும் கண்டறிந்தோர்க்கன்றி மற்றையோர்க்குப் புலப்படுவதெங்கின்? மண்டமாலோ தண்ணனுங் கோங்கமலை என்பன மண்டமா . . . லோ" "தண்ணறுங் கோங்க . . .மலை" என முன்னையதில் ஒரெழுத்தும் பின்னையதில் இரண்டு எழுத்துமே மாத்திரம் அவ்வச் செய்யுளின் ஈற்றெழுத்து எனக் கண்டுபிடிப்பது எந்த ஞானக்காட்சி கொண்டோ? இவற்றுள் அநேகம் இக்காலத்து இல்லாத நூல்களில் உள்ளனவாயின் யாதுதான் செய்தற் பாலது? உள்ள நூற்கும் எல்லாவற்றுக்கும் பெயர் குறித்தாரா?

இதுமட்டுமா? ஒரே இடத்தில் ஒன்றினின்று ஒன்றைப் பிரிக்கும் அடை சொல்லாவது குறியாவது இன்றி முதலும் ஈறும் முதலும் ஈறுமாகப் பல செய்யுட் குறிப்பு ஒரு தொடராய் வருவனவும் இவற்றின் அடிமுடி தேடுவதும் அருணாசலேஸ்வரனுடைய அடிமுடி தேடிய பிரம விஷ்ணுக்களின் பிராயாசைக்கு எட்டுணையேனுங் குறையுமா?

இதனால் உரையாசிரியர் மேல்குற்றம் சொல்கின்றேனென்று கொள்ளற்க. அவர் காலத்து அச்செய்யுட்களும் அவற்றையுடைய கிரந்தங்களும் வழக்கத்துள்ளனவாதலால் அவர் அப்படிச் செய்தலாயிற்று. நமது தேசத்துக் கிரந்த மண்டபங்கள் துலுக்கரால் அக்கினி பகவானுக்கு அளிக்கப்படுமென்றும், தப்பிக் கிடந்தனவும் எழுதுவாரும் படிப்பாருமின்றி ஒன்றொன்றாய் இத்தனை இலேசில் இறந்தவிடுமென்றும் அவர் கனவிலும் நினைத்தவரல்லர்அவை இறந்துபோன இக்காலத்திற்கே இஃதோர் பெரும் சங்கடமாயின்

அல்லதூஉம், அவர் குறியீடு கொடுத்துப் பிரித்தும் இருக்கலாமே.

இனிச் செய்யுள் முழுவதும் காட்டப்பட்டவற்றுள்ளும் இஃது இன்னபா இன்ன பாவினமென்று நிச்சயிப்பதும் பல விடத்துமிக அருமையாயினது. கலியினமான சில செய்யுட்களை அடிபிரிப்பதிற் சந்தேக முற்றுப் பல தக்கப் பண்டிதரை எழுதி விசாரித்தபோது அவர்களும மயங்கி இணைக்குறளாசிறியப் பாவாகப் பிரித்தனுப்பினர். யாது செய்யுளைத்தான் இணைக்குறளாசிரியமாகப் பிரிக்கக் கூடாது?

முதலில் ஒரே செய்யுளென அடியேன் கொண்டதோர் உதாரணம் பின்னர் அயனூல் உதாரணச் செய்யுட்களால் வெவ்வேறு நூலிலிருந்து எடுத்துக் காட்டப்பட்ட இரண்டு செய்யுளெனக் கண்டு அவ்வாறு மாற்றலாயிற்று. பொருட்சுவையே பெரிதெனக் கொண்டு மோனை, எதுகை ஆகிய சிறப்புகளைப் பாராட்டாத சங்கச் செய்யுட்களைப் பழம் ஏட்டுப் பிரதிகளில் வாசித்து அடிவகுத்தறிந்த பெரியோர்க்கு இதன் பிரயாசை தெரியாதிராது.

இனி, 'இனி என் சொற்கொள்ளன் மாதோ' என்பதற்கு என் வார்த்தையைக் கேட்டல் நினக்கு விருப்பமோ? விருப்பமாகில் யான் கூறுகின்றதனைக் கொள்க' என்றாற் போலவும் 'அறுசுவைக்கு முதலாகிய வேம்புங் கடுவும் உப்பும் புளியுங் கரும்பும் போல்வன' என்றார் போலவுஞ் சொன்முடிவு பொருள்முடிவு பூரணப்படாமல் நின்றுழியாம் ஆக்ஷேப விடைகள் பிறர்கோள் கூறல் தன் மதங் கோடலென்றவற்றில் ஆசிரியர் மதமிது பிறர் மதமிதுவெனக் காட்டற் கவசியமான அடைகள் சிதைவுற்றுக் கிடந்துழியும்,

இன்னோரன்ன பிறழ்ச்சி பிற அநுமானிக்கப் பெற்றுழியும், பிரதிகள் அனைத்தும் ஒத்திருப்பனவற்றை எட்டுணையும் யான் மாற்றிலேன். எவ்வகைப் பொருட்டிருத்தமும் யானாகச் செய்ததன்று. துடங்கல் கலிழ்தலாதியவற்றின் ரூபத்தை மாத்திரம் இக்காலத்ததாகத் தொடங்கிக் கலுழ்த லென மாற்றியிருக்கின்றேன்.

இலக்கிய, இலக்கணங்களால் வல்ல பெரியோர் இப்பதிப்பிலுள்ள குற்றங்களை அடியேனுக்குத் தெரிவிக்கும்படி பலமுறையும் பிரார்த்திக்கின்றேன். அன்னோர் அறிவிக்குந் திருத்தங்களைத் திரட்டி, இன்ன இன்ன வழு இன்ன இன்ன வித்துவான்களால் உணர்த்தப்பட்டனவென்று குறிப்பிட்டுத் தொல்காப்பியப் பதிப்புத் திருத்த மென்றொன்று உடனே அச்சிட்டு வெளியிடக் கரத்திருக்கின்றேன். ஐம்பது புதுத் திருத்தங்களுக்கு ஒரு பிரதி என் நன்றியறிவிற்கோர் அடையாளமாக அனுப்புவேன். இந்நூல் பிழையற வழங்கச் செய்வது ஓர் பெரும் லோகோபகாரமென்று உணர்வாராக.

இதனைப் பதிப்பித்ததில் அச்சிற்கும் காகிதத்திற்கும் வந்த செலவினும் பரிசோதனைச் செலவு இருமடங்கிற்கு மேலே சென்றதாகலானும், இப்பெயர்பட்ட அரிய நூல்களைப் படிக்க விரும்பி வாங்குவோர் சிலரே யாதலானும், இதுவித முயற்சியில் கையிடுவதுகைம்முதலுக்கே நஷ்டத்தை விளைவிக்கின்றது. ஆதலால் தமிழ் விருத்தியில் அபிமானமுள்ள பொருட் செல்வர்களால் சிறிது சகாயம் பெற்றாலன்றி இன்னும் இதுபோல அழிகின்ற தசையை அடைந்திருக்கும் அரிய கிரந்தங்களைப்

பரிசோதித்துப் பதிப்பித்தலில் ஊக்கஞ் செல்லாது. இதுவரையும் அச்சு மணமும் பெறாத பூர்வ கிரந்தங்களையே தேடிப் பதிப்பிக்கும் நோக்கமுடையேற்குக் கல்வியருமை தெரிந்த திரவிய சீலர்கள் கைகொடுப்பார்களென்று நம்புகின்றேன்.

ஓரொருவர் ஓரொருநூலைத் தமது செலவிற் தமக்கு இஷ்டமான வித்துவான்களைக் கொண்டு பரிசோதித்து அச்சிடுவிப்பினுந் தமிழ்த் தேசத்திற்கு எவ்வளவு பேருபகாரமாகும்? எத்தனை அரிய நூல்கள் இறவா தொழியும்? அடியேன் வேண்டுகோளின்படி, முன்பு திருவனந்தபுர அரசற்கு மந்திரியாயிருந்த கனம்பொருந்திய ஸ்ரீமத் அ. சேஷைய சாஸ்திரியவர்கள் கலித் தொகையையும் கூடலூர் பிரபுக்களில் ஒருவரும் தர்மசீலருமாகிய ஸ்ரீமத் மஞ்சக்குப்பம் ராஜரத்தின முதலியாரவர்கள் தொல்காப்பியம் சொல்லதிகரத்தையும், நச்சினார்க்கினியாருரை யோடு தமது செலவாகப் பரிசோதித்துப் பதிப்பிக்கும்படி உத்தரவு செய்திருக்கின்றார்கள். இவர்கள் முன்மாதிரியைப் பிறரும் அனுஷ்டிப்பாராக. இதில் முந்தி நிற்க வேண்டியவர்கள் மடாதிபதிகள். இவர்கள் கருத்து இதில் செல்லுமாறு சரஸ்வதி கிருபைபுரிவாளாக.

திரவியலாபத்தை எவ்வாற்றானும் கருதி முயன்றிலேன். கைநஷ்டம் வராதிருப்பதொன்றே எனக்குப்போதும். இது வரையில் பதிப்பித்த நூல்களால் எனக்குண்டான நஷ்டங் கொஞ்சமன்று. இவ்வித முயற்சியில் கையிடுவோர் நஷ்டமுறா திருத்தற் பொருட்டுச் சர்வகலாசாலைப் பரிவுயிற்றேறி, ஆங்காங்குப் பெரும் உத்தியோகம் வசித்திருப்போர் தத்தஞ் சொயபாஷையில் அச்சிடப்படும் பூர்வ

கிரந்தகளில் ஒரு பிரதி வாங்குதல் அவர் கடமையென்றெண்ணுகின்றேன்.

இந்நூலைப் பதிப்பித்தற்கு வேண்டிய காகிதத்திற் காகத் திரவியசகாயஞ் செய்த கண்ணிய தருமசீலர் இருவர் உளர். அவர்களுக்கு மிக்க நன்றி கூறுகின்றேன்.

கும்பகோணம்
**சி.வை.தா.**
பார்த்திப வருடம் ஐப்பசிமாதம்

(தொல்காப்பியம், பொருளதிகாரம்; இஃது பாரத்துவாசி நச்சினார்க்கினியர் இயற்றிய உரையோடும் பலதேசப்பிரதி ரூபங்களைக் கொண்டு பரிசோதித்து யாழ்ப்பாணம் சி.வை. தாமோதரம்பிள்ளையால் பதிபிக்கப் பட்டது. பார்த்திப வருடம் ஆவணிமாதம் Madras; Printed at the Sottisa Press, by Graves, Cookson and Co. 1885, இதன் விலை ரூ. 6.00)

## சி.வை. தாமோதரம்பிள்ளை பதிப்பித்த நூல்கள்

### இலக்கணம்

I
1. தொல்காப்பியம்: சொல்லதிகாரம்-சேனாவரையம் 1868
2. வீரசோழியம்: பெருந்தேவனாருரை 1881
3. இறையனாரகப் பொருள் : நக்கீரருரை 1883
4. தொல்காப்பியம் : பொருளதிகாரம் நச்சினார்க்கினியம் 1885
5. இலக்கண விளக்கம் 1889
6. தொல்காப்பியம் : எழுத்ததிகாரம்- நச்சினார்க்கினியம் 1891
7. தொல்காப்பியம் : சொல்லதிகாரம் நச்சினார்க்கினியம் 1892

### II இலக்கியம்

1. அற இலக்கியம் - நீதி நெறி விளக்கம் - சி.வை.தா. உரையுடன் 1853
2. புராணம் - தணிகைப் புராணம் 1883
3. சங்க இலக்கியம் கலித்தொகை- நச்சினார்கினியருரை 1887

   அகநானூறு (முற்றுப்பெறாதது) 1897
4. காப்பியம் - சூளாமணி 1889

### சி.வை. தாமோதரம்பிள்ளை இயற்றிய நூல்கள்

1. சைவ மகத்துவம்
2. விவிலிய விரோதம்
3. வசன சூளாமணி (அ) திவிட்டகுமாரன் கதை
4. நட்சத்திர மாலை

5. ஆதியாகம கீர்த்தனம்

6. கட்டளைக் கலித்துறை (இலக்கணம்)

7. ஆறாம் வாசகப் புத்தகம்

8. ஏழாம் வாசகப் புத்தகம்

9. காந்தமலர் (அ) கற்பின் மாட்சி (நாவல்)

**சி.வை.தா. வாழ்க்கை வரலாற்று நூல்கள்**

1. தாமோதரம்பிள்ளை அவர்கள் சரித்திரம் டி.ஏ. இராஜரத்தினம் பிள்ளை, ஆனந்தபோதினி அச்சகம், சென்னை, 1934.

2. சி.வை.தாமோதரம்பிள்ளை வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம். எஸ். சிவலிங்கராஜா, யாழ்ப்பாண அபிவிருத்தி சபை, யாழ்ப்பாணம், 1983.

3. தமிழ் வளர்த்த தாமோதரனார், இரா. இளங்குமரன், திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, 1991.

4. தமிழீழம் தந்த தாமோதரனார் - கு. அரசேந்திரன்.

# விளம்பரம்

யான் பதிப்பித்த புத்தகங்கள் இதன் அடியில் குறித்தபடி சென்னப் பட்டணத்தில் வித்தியாநுபாலன யந்திரசாலையில் ந.க. சதாசிவப் பிள்ளையவர்களிடத்தும் கலாரத்நாகர அச்சுக் கூடத்தில் ஊ. முத்துக் குமாரசாமிச் செட்டியாரவர்களிடத்தும் விக்டோரியா ஜூபிலியந்திரசாலையில் வி. சுந்தர முதலியாவரர்களிடத்துஞ், சிதம்பரத்திற் சைவப் பிரகாச வித்தியாசாலை விசாரணைக் கருத்தர். க. பொன்னுசாமிப் பிள்ளையவர்களிடத்தும், யாழ்ப்பாணத்தில் ஏழாலைச் சைவப் பிரகாச வித்தியாசாலை உபாத்தியாயர் சுன்னகம் அ. குமாரசாமிப் பிள்ளையவர்களிடத்துந் தஞ்சாவூரில் புத்தகவியாபாரம் த.நா. திருவேங்கட பிள்ளையவர்களிடத்தும், கோயமுத்தூரில் புத்தக வியாபாரம் இ. ஒன்னைய கவுண்டரவர்களிடத்தும் வாங்கிக் கொள்ளலாம்.

## சி.வை.தா. பதிப்புக்குப் பயன்பட்ட ஏட்டுச்சுவடிகள்

(பதிப்புரைகள் வழி அறியப்படுவன)

**வீரசோழியம்**-திருவாவடுதுறைத் திருமடத்துப்படிகள் திருநெல்வேலித் தாசில்தார் சின்னத்தம்பிப் பிள்ளை படி-தென் தேசத்துப் படிகள்.

**தொல்காப்பியம்-பொருளதிகாரம்**
திருவாவடுதுறை ஆதீனத்துச் சுப்பிரமணிய தேசிகர்படி; யாழ்ப்பாணம் ந.க. சதாசிவப்பிள்ளை; திருநெல்வேலித் தாசில்தார் வை.சின்னத்தம்பியா பிள்ளை படி திருத்தணிகை சரவணப் பெருமாளையர் பௌத்திரர் துரைசாமியையர் படி; புரசபாக்கம் கா.மு.வேற்பண்டிதர் சொந்த கைப்படி தொல்காப்பியம் வரதப்ப முதலியார் படி (சி.வை.தா.விடமிருந்து) மதுரைப்பிரதி

**கலித்தொகை** – புதுவை நயனப்ப முதலியார் மூலபாடப்பிரதி, ஆறுமுக நாவலர்படி திருவாவடுதுறைத் திருமடத்துப்படி, தென்தேசத்துப்படிகள் யாழ்ப்பாணம் கனகசபைப்பிள்ளை படி, திருமணம் கேசவ சுப்பராய முதலியார்படி மயிலை இராமலிங்கப் பிள்ளை படி சென்னை ஓலைச்சுவடித் துறைப் படி நெய்தற்கலி புதுச்சேரி நெல்லித்தோப்புபடி சொக்கலிங்க பிள்ளைபடி நெய்கற்கலி. திண்டிவனப்படி - நெய்தற்கலியின் முதற்பாகம்.

**இலக்கண விளக்கம்** : திருவாவடுதுறைத் திருமடத்துப்படிகள்

**சூளாமணி** : சென்னை மகாலிங்கையர்படி, கருவூர் வெங்கட்ட ராமையங்கார்படி, வேதாரணியம் அ. அநந்தவிநாப முதலியார்படி, பெருமண்டூர் சைவப் புலவர் ஒருவர்படி வீடூர் அப்பாசாமி சாஸ்திரி படி திருச்சிராப்பள்ளி தமிழ் முனிஷி ஒருவர்படி, காஞ்சிபுரத்துப் பழம்படி

**தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்** : தென்தேசத்துப்படிகள், இவையன்றி, தஞ்சாவூர் சப்கோர்ட் நீதிபதி கனகசபை முதலியார் அனுப்பிய 35 ஏட்டுப்படிகள்.

## சி.வை.தா. பதிப்புக்குப் பொருளுதவியோர்
## (பதிப்புரைகள் வழி அறியப்படுவோர்)

அ. சேஷையசாஸ்திரி - கலித்தொகைச் செலவு முழுவதும் தி. குமாரசாமிச் செட்டியார்.

திருத்தணிகைப் புராணச் செலவு முழுவதும். புதுக்கோட்டை ம. அண்ணாமலைப்பிள்ளை.

தொல்காப்பிய எழுத்ததிகாரச் செலவு.

போடி நாயக்கனூர் ஜமின்தார் திருமலை போடயகாமராச பாண்டியநாயக்கர் துரை இலக்கண விளக்கம் அச்சிடப்பொருள் உதவினார்.

இராஜா சர்.த. மாதவராயர்

சர்.ச. இராமசாமி முதலியார்

கௌரவ நியாயாதிபதி

அ. இராமச்சந்திரையர்

கௌரவ இளையபகதூர்

கு.சு. சுப்பிரமணி அய்யர்

கௌரவ ப. சௌசல்ராயர் பேரூர்

ஜமீன்தார் முத்துவிரைய ரகுநாத துமபைசாமி தும்பத்தி நாயக்கர்.

ஊற்றுமலை ஜமீன்தார் இருதாலய மருதப்பதேவர்.

கும்பகோணம் சப்-கோர்ட் நீதிபதி தி. கணபதியையர்

கும்பகோணம் சப்கோர்ட் வக்கீல் சா. இராகவையங்கார்

கும்பகோணம் துரை ரத்தனவித்தியா சாலைத்தலைவர்

பி. பில்டர்பெக்துரை கும்பகோணம்

துரைத்தன வித்தியாசாலை பாஷாசிரியர் சா. சேஷையர்

கொழும்பு சுப்பிறீம்கோர்ட் நியாயதரத்தரர் பொ.குருசாமி முதலியார்

கொழும்பு சுப்பிறீம் கோர்ட் நியாயதரத்தார் பொ. குமாரசாமி முதலியார்.

பொ. இராமநாத முதலியார் மாத்துறை டிஸ்திரிக் கோர்ட் நீதிபதி பொ. அருணாசல முதலியார்.

யாழ்ப்பாணம் வலிகாமம் மேற்கு மணியம் ஆ. இரகுநாத முதலியார்

சீர்காழிகிருஷ்ணசாமி முதலியார்

ஸ்ரீமத் திருப்பனந்தாளாதீனம் குமாரசாமித் தம்பிரான் வித்தியா விசாரணைக் கருத்தர்

கு. நாகோறிராயர் கவித்தலம் துரைசாமி மூப்பனார் ராவுகாசிப் சேலம்

இராமசாமி முதலியார் சூளாமணி பதிப்பித்தலில் உதவிய ரங்கூன் நாட்டோர்.

வி. நமசிவாய பிள்ளை

மா. குப்புசாமி முதலியார்

தி.வி. கிருஷ்ணசாமி நாயுடுகாரு

பி. வேதாசல முதலியார்

தி.எம். பொன்னுசாமிப் பிள்ளை

சி.வை. இளையதம்பி (சி.வை.தா. சகோதரர்கள்) சென்னை-

பம்மல் விஜயரங்க முதலியார்

கொழும்பு கி. பிறிற்றோதுரை

திருநெல்வேலி கனகசபை முதலியார்

யாழ்ப்பாணம் சிந்தாமணி வேலுப்பிள்ளை

சென்னைப் பாளையம் சோமசுந்தரச் செட்டியார்.

**அச்சு உதவி**

இந்து இதழாசிரியர்கள் க. சுப்பிரமணியையரும் மு. வீரராகவாசாரியாரும் 30-30 படிவங்களுக்கு மேற்படாத நூலொன்றனைக் காகிதச் செலவொடு தம் அச்சியந்திசாலையில் பதிப்பித்துத் தருவதாகக் கூறினாராம்.

**ஊக்கப் படுத்தியோர்**

தொண்டமான் புதுக்கோட்டை இளவரசு ராஜா பாலசுப்பிரமணிய ரகுநாத தொண்டமான் துரை ந.க. சதாசிவப் பிள்ளை, த. கனக சுந்தரம் பிள்ளை நல்லூர் சிற். கைலாசபிள்ளை இவர்கள் யாவருக்கும் தம் பதிப்புரைகளின் கண் சி.வை.தா. நன்றி தெரிவித்துள்ளார்.

# தொல்காப்பியம் - சொல் 1892
## நன்றிகூறல்

படிப்பாரும் எழுதுவாருமின்றிப் பாணவாய்ப் பட்டுத் தேடுவாரும் தொடுவாருமின்றிச் செல்லுக்கிரையாகியும் காலந்தரத்தில் ஒன்றொன்றாய் அழிந்துபோம் பழைய தமிழ் நூல்களை இயன்றமட்டும் அச்சிட்டு நிலைநிறுத்தத் தொடங்கிய என் முயற்சிக்கு உதவியாக ஆங்காங்குள்ள தருமசீலர்கள், சென்ற வருஷம் வைகாசி மாதம் வரையும், எனக்கு அப்பப்போ உபசரித்த பணத் தொகையைக் கலித்தொகை, தொல்காப்பிய எழுத்ததிகாரம் இவற்றின் பதிப்புரையிலே அவரவர் நாமநேயத்தோடு தெரிவித்திருக்கின்றேன்.

அதன்பின்பு, இரங்கூனிலே கடை வைத்திருக்கும் நாட்டுக்கோட்டைச் செட்டிப் பிள்ளைகளுள் ஸ்ரீ இராமநாதன் செட்டியென வழங்கப் பெயர் பெற்ற சொக்கப்ப செட்டியார் ரூ. 50 அனுப்பிவைத்தார். அவரதுதயாள குணத்தை என்றும் மிகுந்த நன்றியறிவுடன் பாராட்டுவேன்.

தருமச் செலவுகளில் இக்காலத்தில் அதிபிரசித்தி யடைந்திருக்கும் நாட்டுக்கோட்டைச் செட்டிப் பிள்ளைகளில் வேறு பெயர்களும் இம்முன்மாதிரியை அனுசரித்து இப்படிப்பட்ட முயற்சியுடையவர்களுக்கும் ஒருவாறு துணைசெய்யும்படி அவர்கள் மனத்தில் எந்நாளும் குடிகொண்டிருக்கும் - நடேசப் பெருமான் அருள் புரியுமாறு அவரது திருவடிகளைப் பிரார்த்திக்கின்றேன். நத்தன வருடம் புரட்டாதி மாதம் - சி.வை.தா.

## சி.வை.தா. பற்றிய கட்டுரைகள் (கால வரிசையில்)

1. தொல்காப்பியப் பதிப்பு - தமிழ் தந்த தாமோதரம் பிள்ளையின்பரமோகாரம், கி. கணபதிப் பிள்ளை, 1950.
2. ராபி. சேதுப்பிள்ளை, தாமோரம்பிள்ளை 1952, (1832-1901).
3. அ. சிம்பரநாதன், 1955, பதிப்பாசிரியர் தாமோதரம்.
4. எஸ். வையாபுரிப்பிள்ளை, 1959, சி.வை. தாமோதரம்பிள்ளை.
5. சி. தில்லைநாதன், 1967, தமிழார்வம் மிகுந்த தாமோதரம் பிள்ளை.
6. மு. கணபதிப் பிள்ளை, 1967, தாமோதரம்பிள்ளை, சி.வை.ராவ்பகதூர், பி.ஏ.பி.எல்.
7. சோமலெ, 1968, தாமோதரம் பிள்ளை (1832-1901).
8. மு. வை. அரவிந்தன், சி.வை. தாமோதரம்பிள்ளை (1832-1901)
9. பொ. பூலோகசிங்கம், 1970, பதிப்புப் பேராசிரியர், தாமோதரம்பிள்ளை.
10. இ. செல்லத்துரை, 1971, தாமோதர வரலாறு.
11. ஆ. வேலுப்பிள்ளை, 1975, பதிப்புத் தமிழ் முன்னோடி, சி.வை. தாமோதரம்பிள்ளை.
12. மா.சு. சம்பந்தன், 1980, பழம்பதிப்பாளர்கள், சி.வை. தாமோதரம்பிள்ளை (1832-1901).
13. சி. கணபதிப்பிள்ளை, 1981, தமிழ் தந்த தாமோதரம்பிள்ளை.
14. மது.ச. விமலானந்தம், 1981, சி.வை. தாமோதரம்பிள்ளை.
15. தமிழ்ப் பதிப்பு முன்னோடிகள், சி.வை. தாமோதரம் பிள்ளை, அ. வினாயக மூர்த்தி, 1983.
16. எஸ்டி. காசிராசன், 1987, பதிப்புத்துறை முன்னோடிகள், தாமோதரம்.

17. புலவர் இரா. இளங்குமரன், பழந்தமிழ்ப் பதிப்பாளர்கள், 1989.

18. தமிழ்ப்பதிப்பு முன்னோடி, சி.வை. தாமோதரம்பிள்ளை, நா. விசாலாட்சி, 1989.

19. ந. விசாலாட்சி, 1990, கலித்தொகை, தாமோதரனார் பதிப்பு.

20. ச.வே. சுப்பிரமணியன், 1992, சி.வை. தாமோதரம்பிள்ளை.

21. மு. சற்குணவதி, 2009, தமிழர் பண்பாட்டில் தடம்பதித்த ஈழத் தமிழறிஞர் , சி.வை.தா.

() () () () ()

## தாமோதரம்பிள்ளை அவர்கள் சரித்திரம் என்ற நூலுக்குத் (தமிழுலகம் எங்ஙனும் புகழ்பெற்ற உத்தமதானபுரம், மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய)

### முன்னுரை

ஒவ்வொரு வகையில் நற்காரியங்களைச்செய்து புகழ்பெற்ற லோகோபகாரிகளுடைய சரித்திரங் களைப் படித்தலால் நாம் அடையும் பயன்கள் மிகப்பல.

ஏறக்குறைய நாற்பது வருடங்களுக்குமுன் சென்னையிலும் புதுக்கோட்டையிலும் கும்ப கோணத்திலும் வெவ்வேறு லௌகிகத் துறைகளில் அமர்ந்தவரும் சங்கங்களில் அங்கத்தினராக நெடுங்காலம் இருந்தவருமான யாழ்ப்பாணம் ராவ்பகதூர் சி.வை. தாமோதரம் பிள்ளையவர் களைப் பற்றித் தமிறிஞர்கள் பலர் கேள்வி யுற்றிருக்கலாம்.

இவரைப்போல் ஆங்கில பாஷையில் விசேஷமான பாண்டித்திய மடைந்து தமிழிலும் நல்ல பயிற்சியைப் பெற்றிருப்போர் இக்காலத்தில் மிகச் சிலரே யாவர். இவருடன் நான் நெருங்கிப் பழகியிருக்கிறேன்.

தமது ஓய்வு நேரத்தைத் தமிழாராய்ச்சியில் பெரும்பாலும் செலவிட்டு வீரசோழியம், தொல்காப்பியச் சொல்லதிகாரம், தொல்காப்பியப் பொருளதிகாரம், இறையனராகப் பொருள், இலக்கண விளக்கம், கலித்தொகை என்பனவற்றில் மூலங்களையும் உரைகளையும் திருத்தணிகைப் புராணம், சூளாமணி என்பனவற்றின் மூலங்களையும் பல ஏட்டுச் சுவடிகளைக் கொண்டு பரிசோதித்து முதன் முறை அச்சில் பதிப்பித்து வெளியிட்டவர் இவரே.

இக்காலத்தில் தமிழில் பல துறைகளில் ஆராய்ச்சி செய்வோருக்குப் பெருந்துணையாக இருப்பன இவர் வெளியிட்ட புத்தகங்களாகும்.

இவருடைய சரித்திரத்தை விரிவாக வசன நடையில் ஸ்ரீமான் T.A. இராஜரத்தினப் பிள்ளையவர்கள் எழுதி அச்சிட்டிருக்கிறார்கள். இப்புத்தகத்தில் சில பகுதிகளை நான் படித்துப் பார்த்ததில், ஸ்ரீ தாமோதரம் பிள்ளையவர்களின் முக்கிய வரலாறுகளெல்லாம் நன்றாகச் சேர்க்கப் பெற்றுள்ளன வென்று தெரியவந்தது. யாவரும் நன்றாக அறிந்து கொள்ளும்படி கூடிய வரையில் நல்ல நடையில் இவ்வசனநூல் எழுதப் பெற்றுள்ளது.

தமிழ்ப் பயிற்சியுள்ளவர்கள் இப்புத்தகத்தை வாங்கிப் படித்து இன்புறுவார்களென்று நம்புகிறேன்.

இங்ஙனம்

வே. சாமிநாதையர்

## சூளாமணிப் பதிப்புரை

### குருவணக்கம்

இறைவனோ ருருவுகொண் டெழுந்தாங்கு வீற்று
மறைசையா தீனத்து மன்னுபு வதிந்த
கரணை யம்பதிக் கைலாச நாத
குரவன திருபதி மருமலர்
சிரமிசை யிருத்தி வெங்கருமுதல் களைவாம்.

### தமிழாசிரிய வணக்கம்

தெள்ளுதமிழ்க் கடல்கடந்துசெழியகலைத்
துறைப்படிந்து
திரிபில் ஞானக்
கொள்ளை கொண்டு நுகர்ந்திமுத்துக் குமாரகவி
மேகமிதைக்
கொடிச்சுன் னாக
வள்ளலென துள்ளமதி கொள்ளநறைவிள்ளுதமிழ்
மணஞ்சற் றேறி
வெள்ளறிவின் முடைநாற்றம் வீவித்தான்
விரைமலர்த்தாள்
டிலைவன் மாதோ!

தமிழும் சமஸ்கிருதமும் ஈஸ்வரன்பால் உதித்த இரட்டைப் பிள்ளைகளாம். சமஸ்கிருதத்திற்குப் பாணினியும் தமிழிற்கு அகத்தியரும் செவிலித் தலைவராயினர். சமஸ்கிருதம் வடபாலில் நைமிசாரணியத்து ரிஷிகள் கோட்டத்திலும் தமிழ் தென்பாலில் மதுரைப் பாண்டியர் அவைக்களத்திலும் வளர்ந்து முறையே வடமொழி தென்மொழியெனும் நாமம் வழங்கப்பெற்றன. "இருமொழிக்குங் கண்ணுதலே முதற்குரவரியல் வாய்ப்ப இருமொழியுந் தழீஇயினா ரான்றவரே யென்றாயின் இருமொழியுநிகரென்னு மிதந்தகைய முளதேயோ"

அகத்தியர்க்குத் தமிழிலக்கணம் அறிவுறுத்தியவர் சுப்பிரமணியக் கடவுளெனச் சைவர் கூறுவர்; சமணர் அதை மறுத்து அவர்க்கு அவ்

அறிவுறுத்தினார் அவலோகிதனென்பர். அகத்தியர் சைவோத்தமராதலின் அது பொருந்தாது. அஃது எவ்வாறாயினும் ஆகுக. தமிழினங்களுக்குப் பாலருத்தி வளர்த்தவர் அகத்தியரென்பது அனைவருக்கும் உடம்பாடேயாம்.

வளர்த்த இடம் மதுரையாயினும் தமிழில் சனனபூமி கங்காதீரமே யென்பதுஉம், ஆதியர் வடமேற்றிசையினின்று வந்த காங்காதீரத்திற்குடியேறின போது ஆண்டு இருந்த தமிழர் அவரோடு இணங்கியிராது பறிந்து பற்பல இடங்களில் சென்று சிதறுண்டு விதித்தன ரென்பதூஉம், அவர்களிற்றென்னாட்டிற்கு வந்தவர்களே ஈண்டுச் சேர சோழ பாண்டிய இராச்சியங்களை நாட்டினாரென்பதூஉம், மதுரைச் சங்கத்தில் வளர்ந்து விருத்தியடைந்து சிறப்புற்ற தமிழோடு அவ்வாறு சிறப்புறாதென வாய்க் காலவேற்றுமை சிறிதடைந்து வழங்கும் தென்மேற்சிறபுக்கு உறைந்த மலையாளரதும், மேற்கிற்புக்கு உறைந்த குடகரதும் உதகமண்டலத்துப்புக்கு உறைந்த வடக்கிற் புக்கு உறைந்த இமய மலைச்சாரலில் ஒருவகைவேடரதும் பாஷைகளுக்குள்ள ஒற்றுமையால் விளங்கும்.

சமஸ்கிருதம் உச்சாரண வன்மையானும் வேதாகமதிகரத்தானும் மந்திரரோபதேசப் பயிற்சியானும் ஆடூஉலவுணமுடையதாகத், தமிழ் தன் மிருதுத் தன்மையானும் குயில் கிளி பூவைகள் தலைநாணும் ஓசையுங் கரும்பு தேன்பாகு பாலெனயவற்றை வென்று தேவாமிர்தத் தோடொத்த இனிமையும் உடைமையானும் தேவாரத் திருவாசகாதிகளினாற் சாக்ஷாத்ஈஸ்வரனையும் மயங்கச் செய்யும் உபகரணத்தினானுஞ் சங்கீத சாகித்ய செய்யுள் விநோதங்களானும் மகடூஉ லக்ஷணம் மேற்பட்டது.

இரண்டும் ஒன்றோடொன்று கலவாது

விந்தகிரிக்கும் வேங்கடமலைக்கும் இடையே கிடந்ததோன் பேராரணியத்தால் காக்கப்பட்டு வளர்ந்தன. ஆயினும் மங்கைப் பருவமுற்ற கன்னித்தமிழ் பின்னர்த் தன் புராணேதிகாச காலத்தில் சமஸ்கிருத நாயகனைமாலை சூட்டி மணம் புரிந்தது. ஆதலால் இஞ்ஞான்றைத் தமிழில் வழக்கினும் செய்யுளினும் சமஸ்கிருதம் எங்கணும் வியாபித்துக்கொண்டிருக்கிறது. பண்டைத் தமிழோ அக்கலப்புனயதன்று. இஃது இரண்டு மாயின் இலக்கண விதிகளாலும் சங்கமரீஇய பழைய தனித்தமிழ் நூல்களானும் உள்ளங்கை நெல்லிக்கனி போலத் தெள்ளிதிற் புலப்படும்.

நைமிசாரணிய ரிஷிஸ்வரர்கள் காலத்தில் பின்னர்ச் சமஸ்கிருதம் ஆரியப் பிராமணாசிரியர்களால் பராமரிக்கப்பட்டது போல் மதுரைச் சங்கத்தார் காலத்தின் பின்னர்த் தமிழிற்குக் கைகொடுத்துப் பரிபாலனம் செய்தவர்கள் சமணரென்பதூஉம். இக்காலத்தில் தமிழ் கற்போர் இலக்கிய இலக்கணப் பயிற்சிக்காக ஓதிவரும் நூல்களில் பெரும்பான்மையான சமணர் காலத்திற் சமணாசிரியர்களால் எழுதப்பட்டனவென்பதூஉம் முன் வீரசோழியப் பதிப்புரையில் கூறியிருக்கின்றேன். அவற்றுள் சீவகசிந்தாமணி முதலிய பெருங்காப்பியங்களாகத் சிறப்புடைய தமிழில் சமணர் எழுதிவைத்த யசோதர காவியம் உதயணகாவியம் நாககுமார காவியம் சூளாமணி நீலகேசியெனும் பெரிய சிறு காப்பியங்களும் உள. அவைகள் காலந்தரத்தில் ஏடெழுதுவோரால் பெருகிய பிழைகளினால் பேதப்பட்டு மிக விகார முற்றுக் கிடக்கின்றன.

**இற்றவர் தேவராயப் பிறப்ப ரீண்டுடல்**
**பற்றிய விசும்பிடைப் பரவு மாமுகி**
**றெற்றென வீழ்ந்தெனச் சிதைந்து போகுமான்**
**மற்றினி மக்கடம் வண்ணஞ் செப்புவாம்**

என்னும் சிந்தாமணிச் செய்யுளின் மூன்றாம் அடி ஓரேவொரு பிரதியில் "அற்றென முற்றிலுமழிந்து போகுமால்" எனவும், "இற்றென விழிந்தென வீந்து போகுமால்'' எனவும் சில பிரதிகளில் முதலடியொழிந்து ஏனை மூன்றடியும் முற்றும்ரூபம் மாறி அற்றமில் பறவைகளடையக் கொண்டு போய்ச் "சுற்றியபாற் சுடலுளும்ப வீட்டிடும்-பொற்றிரள்வரையொடு மின்னுப் போலவே'' எனவும் பிறழ்ந்து கிடப்பின் பழஞ்சுவடிகளை ஒப்பிட்டுப் பரிசோதனை செய்பவர்களுக்கே இவைகளால் நேரிடும் வருத்தம் தெரியும்.

சூளாமணி இரண்டாவது காவியமென அதன் பிரதிகளிருக்கும் குறியீட்டினால் தெரியவருகின்றது. முதலாவது காவியம் எது வென்றும் மற்றைய காவியங்களின் வரிசைக்கிரமம் இன்னதென்றும் விளங்கவில்லை. நீலகேசி என் கைக்கு அகப்படவில்லை. ஆயிரத்து நானூற்றுச் சொச்சஞ் செய்யுளுள்ள மேருமந்தர புராணத்தில் முதல்பாகமும் யசோதரகாவியமும் காஞ்சிபுரத்திலிருந்த ஸ்ரீ பாகுபலி நயினாரால் அச்சிடப்பட்டன. எஞ்சியன அச்சில் வரவில்லை. சுரவிரதகாவியம் என்று ஒன்று தோன்றவில்லை.

யாப்பருங்கல விருத்தியிலும் அதனை முதனூலான்கொண்டு அமிதசாகரர் இயற்றிய காரிகைக்குக் குணசேகரர் சகாப்தம் 200-300 அளவில் எழுதிய விரித்துரையிலும் சூளாமணியிலிருந்து அநேக செய்யுள்கள் இலக்கியமாக எடுத்துக்காட்டப்பட்டிருந்தலானும், சூளாமணியின் காலஞ் சோழமண்டலத்தில் கார்வெட்டி நகரத்திலிருந்து அரசு புரிந்த விசயராசன் காலமென்பது நூற்சிறப்பிற் திக்கெட்டும் புகழ்படைத்த திறல்விசையின்'' என்றற்றொடக்குச் செய்யுளான் அறியக் கிடத்தலானும் இந்நூலின் வயது ஆயிரத்தை நூறு வருஷத்திற் குறையாது.

எவ்வெவ்பாஷையினும் பெருங்காவியங்கள் தோன்றிய பின்னரும் ஆங்காங்குக் காலந்தோறும் சிறுகாவியங்கள் உதித்து நடைபெறுதல் வழக்காயினும் சிலபல சிறுகாவியங்கள் செனித்த பின்னரே பெருங்காவியங்கள் பிறத்தல் இயல்பு. மேற்கூறியது சிறுகாவியங்களை ஒழித்தால் சமணருக்குச் சிந்தாமணிக்கு முன்னர்த் தோற்றிய சிறுகாவியங்கள் வேறில்லை. இருந்தும் இறந்ததாளங் கேள்வியில்லை. அன்றியும் குணசாகரர் காலத்தில் சிந்தாமணி முதலிய பெருங்காவியங்கள் இருந்தனவாகில் விசேஷமாக அவற்றினின்றே உதாரணங்கள் காட்டியிருப்பர். ஆதலால் இந்நூல் ஆருகதப்பெருங்காப்பியங்களுக்கு முந்திய தென்று கொள்ளல் தவறாகாது.

யகர ஆசெதுகைக்குக் "காய்மாண்ட" என்னும் சிந்தாமணிச் செய்யுள் காட்டாக எடுத்து ஆளப்பட்டிருக்கின்ற தாலோவெனின், ஆண்டு உரையசிரியர்கள் காட்டியது. ''வேய்காயுமென்பாணைத் தோள்'' என்னும் சூளாமணிச் செய்யுளென்னும், அஃது ஆசிரியராற் சவலை விருத்தத்திற்கு ஓர் இலக்கியமாகும் பொருட்டு வைக்கப்பட்டது உணராது, ''கொகுடியென்பதோர் மரப்பெயருளதென்று அறியார் கோங்கமென்று மாற்றினாற்போல், அச்செய்யுளில் இரண்டாம்'' அடிசீர் குறைந்திருப்பது பிற்காலத்துச் சிதைவென்று கருதி, அதனை ஒழித்து, அதற்குப் பதிலாகக் "காய்மாண்ட" என்றற்றொடக்கத்துச் செய்யுளை இக்காலத்தில் யாரோ சொருகிவிட்டார்களென்றும், எழுபது எண்பது வருஷத்திற்கு முந்திய பழஞ் சுவடிகளில் "வேய்காமென்பணைத்தோள்" என்னும் உதாரணமே இன்னுங்காணலாமென்றும், ரகர ழகர ஆவெதுகைமூன்றா மெழுத் தெதுகை முதலியவைகட்குச் சூளாமணி யிலக்கியங் கொண்ட

உரையாசிரியர்கள் யகரமொன்றிற்கு மாத்திரஞ் சிந்தாமணியிற் கைவைத்தற்கோர் அவசியம் இருக்கமாட்டா தென்றுஞ், சிந்தாமணியிற் புதிதாகத் தேடி எடுத்ததென்பதற்கு அஃது அக்காப்பியத்தின் முதலாவது இலம்பகத்தின் முதலிலே கிடப்பதே ஒரு சான்றென்றுங் கூறியிருக்க நூல் முழுவதிலுஞ் சிந்தாமணி உதாரணம் வேறில்லையே.

நாலைந்து வருஷத்தின்முன் யான் ஸ்ரீ கைலாசப்பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்துச் சற்குருநாத சுவாமிகள் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக மூர்த்திகளைத் தரிசிக்கப்போயிருந்தபோது சுவாமிகள் சூளாமணி ஓர் அருமையான நூலென்றும் அஃது இப்பொழுது மரணதசை அணிந்திருப்பதால் அதனை அச்சிட்டுக் காப்பாற்றுதல் தக்கதென்றுந் தமிழ்ப் புராதன நூல்களை என்னால் இயன்றமட்டும் தேடிப் பரிசோதித்து வெளியிடும் முயற்சியில் கையிட்டிருப்பதால் யானே அதனைச் செய்தல் வேண்டுமென்றும், கட்டளையிட்டதுமின்றிச் சென்னை மகாலிங்கையர் பிரதியொன்று தமது ஆதீனத்திலிருந்ததை எடுத்து என் வசம் அனுப்பியுமருளியது. அதனை வாங்கி வாசித்துப் பார்த்தபோது, காரிகையில் இலக்கியமாகக் காட்டப்பட்டுள்ளவை சொற்சுவைபொருட் சுவைகளில் சிறந்தனவாயினும் யாது நூலகத்திலிருந்து எடுக்கப்பட்டனவென இக்காத்து அதனை ஓதுவார்க்குத் தெரியாதனவுமாகிய விருத்தங்கள் ஆங்காங்குக் கிடத்தல் கண்டு, அஃதோர் அரிய இலக்கியமேயெனத் தேறிச் சுவாமிகள் கட்டளையைச் சிரமேற்றாங்கி, வேறு பிரதிகள்தேட ஆரம்பித்தனன். அவ்வவ் இடங்களில் இருக்கும் எனது இஷ்டர்களான உத்தியோகஸ்தர்கள் வித்வான்களுக்குப் பிரதிகள் விசாரித்துச் சம்பாதிக்க எழுதியதில் அப்பொழுது

கருவூரிலிருந்த பண்டிதர் ஸ்ரீமத் வெங்கட்டராமையங்காரவர்கள் தம்மிடம் இருந்த தோர் பிரதியை அனுப்பினதுமன்றி மன்னார் குடியிற் சைன தெருவில் ஒரு பிரதி இருப்பதாகவும் தெரிவித்தார்கள். அந்தப் பிரதிக்காக ஆளனுப்பி, அது கும்பகோணத்துச் சாசனப் பதிவு சாலையில் உத்தியோகமாயிருந்த சைன மாணவர் ஒருவர் எடுத்துப் போயிருப்பதை அறிந்து அவரிடம் நேரிலே சென்று கேட்டதற்கு அவர் யான் அப்பொழுது கலித்தொகைப் பரிசோதனையிற் கையிட்டிருந்தமை பற்றித் தன்னிடம் இருக்கும் புத்தகம் எனக்கு எப்போது வேண்டுமோ அப்போது அனுப்பிவைப்பதாக வாக்களித்தனர். மற்ற இடங்களிலிருந்து இப்பெயருள்ளதோர் நூலிருப்பதாகவும் அங்குள்ளவர்களுக்குத் தெரியவில்லை யென்று பதில் வந்தது.

இம் மூன்று பிரதிகள் தாம் தமிழ் நாட்டில் உண்டென்று எண்ணிக் கொண்டு, அதுகாறும் பிரசுரம் செய்த நூல்களால் எனக்கு நேரிட்ட செலவைக் குறித்து ஆலோசித்து, இந்நூலைச் சென்னைச் சர்வகலா சங்கத்தார் தமது பொறுப்பில் அச்சிடுவித்து நாலைந்து வருஷத்திற்குப் பிரவேச பரீக்ஷைக்கு ஏற்படுத்தினால் உத்தமமாக இருக்குமென்று அச்சங்கத் தலைவர்களுக்கு விண்ணப்பம் செய்தேன். அவர்கள் தங்கள் உத்தியோகத் தவணையை அதிச்சிரமத்து நாலைந்து வருஷத்திற்குப் பாடநியமனம் பண்ணுதல் சிரமத் தாழ் வென்று உத்தேசித்துப் போலும், சென்னைச் சமஸ்கிருத திராவிடக் கிரந்த பரிபாலன சபையோரால் என் விண்ணப்பம் கவனிக்கப்படும்படி அச்சங்க விதிகளுக்கு என் விண்ணப்பத்தை அனுப்பினார்கள். அச்சபையார் நூலை அச்சிடுவதற்கு இசைந்து என் சந்தேகங்களைப் பூரணமாகத் தெரிவிக்கும்படி எனக்கு எழுதினர்.

இதற்குள் இந்நூற் பிரகடனாதி செலவுகட்குயான் காத்திரா வண்ணம் ஒருவழி ஏற்பட்டது. தமிழ் கற்கும் மாணாக்கருக்குப் பஞ்சலக்ஷணப் பயிற்சி உண்டாதற் பொருட்டுத் திருவாரூர் வன்மீகநாத தேசிகர் குமாரர் வைத்தியநாத தேசிகர் இயற்றியருளிய "இலக்கண விளக்கம் மூலமும் உரையும்." அச்சிட எண்ணி அதன் செலவிற்காக ஒரு விளம்பரம் செய்திருந்தேன். அப்பொழுது அச்செலவில் ஒரு பாதியைத் தாங்கள் பொறுத்துக் கொள்வதாக இரங்கூன் டிப்டிக் கமிஷனராபீசில் மானேஜராக இருக்கும் எனது சகோதரன் செல்வச் சிரஞ்சீவி தம்பிப்பிள்ளையும் அவர் இஷ்டர்கள் சிலரும் சேர்ந்து 500 ரூபாய் அனுப்பிவைத்தார்கள். பின்பு அந்நூல் பிரகடனச் செலவு முழுவதும் தாமே தருவதாகப் போடிநாயக்கனூர் ஜமின்தார் மகாமகாஸ்ரீ திருமலை போடய காமராசபாண்டிய நாயக்கர் துரை தெரிவித்தனர். அதனை அவர்களுக்கு அறிவித்து அவர்கள் அனுப்பியபணத்தை வேறொரு பூர்வக்கிரந்த பிரகடனத்திற்காகச் செலவு செய்யலாமா எனக் கேட்பித்தேன். அவர்கள் அனைவரும் அதற்குச் சம்மதம் கொடுத்தார்கள்.

இஃதிவ்வாறிருக்க, என் கலித்தொகைப் பதிப்பு வெளிப்பட்டது. அது சென்னைச் சர்வகலாசங்க பரிக்ஷைகளுக்கு உபயோகமாதற் பொருட்டு, அதன் பதிப்புரையில் யான் தெரிவித்தவாறு அதில் பதினோரிடத்தில் குஃறொடரன்மொழி வந்தனவற்றை மாற்றியிருந்தனன். பற்பல சிரேஷ்டகனவான்கள் அச்செய்கையை மிகவும் கண்டித்து எனக்குக் கடிதம் எழுதினார்கள். அதனால் அஃதன்ன இடக்கர் மொழிகளைச் சிதைத்து அச்சிடுதல் தன்மகன்னென்று தெரிந்தும், சபையார் அவற்றின் செறிவோடு நூல்களைப் பிரசுரியாரெனத் துணிந்தும், அவ்வாறு பிரதரித்தல் எனக்குக் கட்டளையிட்டருளிய சுவாமிகளின்

அனுமதிக்கு மாறாகுமென்று நினைத்தும் செலவிற்கு வேறு வழி ஏற்பட்டதைப் புகழ்ந்தும் யானே எவ்வாற்றானும் இந்நூலை அச்சிடத் தீர்மானித்தேன். இரங்கூன் பணம் அதற்கு உபயோகமாயினது.

இப்பால்முன் தஞ்சாவூர்க் கீழ்க்கோர்ட் நீதிபதியாயிருந்த மகா மகா ஸ்ரீ திரு. கனகசபை முதலியாரவர்கள் என் முயற்சிக்கு எஞ்ஞான்றுந் தமது கஷ்டத்தைப் பாராமல் கையெழுத்துப் பிரதிகள் தேடி உபசரிப்பவர், அப்பொழுதும் பற்பல இடங்களினும் தமதிஷ்டர்கள் மூலம் சூளாமணிப் பிரதிகள் தேடுவராய் வேதாரணியம் ஸ்ரீ அருமைப் பெருமாள் முதலியார் மகன் அந்த விநயமுதலியார் பிரதியொன்னும் பெருமண்டூரிலுள்ள ஒரு சைவ வித்துவானுடைய பிரதியொன்றுமாக இரண்டு பிரதி தமக்கு அகப்பட்டன. அனுப்பிவைத்தனர். அதன் மேல் விழுப்புரம் டிஸ்ற்றிக்ட் முன்சிப்மகாமகா ஸ்ரீ இராமச்சந்திரையரவர்கள் வழியாக வீடுர்ச் சைன வித்துவ சிரோமணி ஸ்ரீ மான் அப்பாசாமி சாஸ்திரிகள் பிரதியொன்று அகப்பட்டது. மன்னார்குடிப் பிரதியை வேண்டியபோது தருவாரென்று வாக்குப் பண்ணிய மாணவன் இதற்குள் இறந்துவிட, அப்பிரதியாவர் கையிற் சிக்குண்டதென்று எவ்வளவு தூரம்விசாரித்தும் தெரியவில்லை. கிடைத்த பிரதிகள் ஐந்தில் வேதாரணியப் பிரதியுங் கருவூர்ப் பிரதியும் விடூப் பிரதியைப் பார்த்து எழுதப்பட்டன வாதலாற்பரிசோதனைக்கு பயன்படத்தக்க சுயபிரதிகளாகாமற் போய்விட எஞ்சிய மூன்று பிரதிகளையும் கொண்டே அச்சிட ஆரம்பித்தேன்.

நூறுபக்கம் அளவு அச்சான பின்பு, தென்தேசப் பிரதியொன்று, எனது நண்பரும் பண்டைத் தமிழ்நூல் ஆராய்ச்சியே தமக்குப் பொழுது போக்கும் வினோதமாக உறையவிருஞ் சென்னைத் தபாலா பீசுகனின் மேல் விசாரணைத்

தலைவருமாகிய மகாமகாஶ்ரீ மல்லாகம் வி. கனகசபைப் பிள்ளையவர்களுடையது. அவரிடம் திரிசிராப்பள்ளியில் தமிழ் முனிஷி ஒருவர் வாங்கி வைத்திருந்தது இறந்து போகக், கும்பகோணத்தில் ஒரு ஹெட்கான்ஸ்டேபில் கையில் சேர்ந்திருந்ததை அறிந்து அதனை அவ்விடத்திற் போலீஸ் மேல் விசாரணையிலிருக்கும் மகாமகா ஶ்ரீ கிருஷ்ணசாமி நாயுடு அவர்கள் சகாயித்தாற் றருவித்தேன். அதற்கும் முதன் மூன்று பிரதிகளுக்கும் அநேக வேறுபாடுகள் இருந்தமையால் இன்னுஞ் சில பிரதி எவ்விடத்தாயின் இருக்குமாயின் அவற்றையுந்தேடி ஒத்துப்பார்த்துக் கொண்டே அச்சிடுதல் அத்தியாவசியமென்று உட்கொண்டு, அங்கங்கே சமணர்கள் குடியிருக்கும் இடங்களுக்கெல்லாம் நேரிலே ஒரு சுற்றுப்பிரயாயணம் பண்ணிக் காஞ்சிபுரத்தில் மாத்திரம் ஒருமிகப் பழம்பிரதி கண்டு அதனை வாங்கி வந்தேன். இவ்விரண்டோடும் ஒத்துப் பார்த்திடும் முன்பு அச்சிட்ட அவ்வளவும் மறுபடி திருத்தி அச்சிட வேண்டியதாயிற்று. வேறுபிரதி எங்கும் அகப்பட வில்லை. கும்பகோணத்திற்குப் போயிருந்ததாக யான் முன்னர்ச் சொன்ன மன்னார்குடியில் பிரதி வீடூர்ப் பிரதியையே பார்த்தெழுதப்பட்டதென்று அதன் சொந்தக்காரன் மன்னார்குடியிற் சொன்னமையால் அதனை யான் பின்பு இச்சித்துத் தேடவில்லை.

காலாந்தரத்தில் ஏடெழுதுவோரால் பெருகிப் பெருகி வந்த பிழைகளினாற் காவியங்கள் மிகவும் பேதப்பட்டு விகாரம் அடைந்திருக்கின்றமை முன்னமே சொன்னேன். இம்மாறுபாடுகளைக் குறித்து இந்நூல் பதிப்பில் அடியேனுக்கோர் துணிவு புதிதாகப் பிறந்தது. இது காறும் அச்சிட்ட பழைய நூல்களில் ஒரு பிரதியின் ஆதாரமாவது இல்லாது பாடபேதத்தைத் திருத்துதல் ஒழிந்த யான், இப்பொழுது பிரதிகள் அனைத்தும் பிழையென்றும்

பிரதிகளில் இருக்கும் பாடம் ஆக்கியோன் வாய்மொழியாய் இருக்கமாட்டாதென்றும் எந்தப் பிரதி வழிச் சென்றாலும் அச்சில் வருவது ஆசிரியரின்றும் வேறுபட்ட பிழைபாடென்றும் நிச்சயிக்க ஏதும் உண்டான இடங்களில் இரண்டொரு எழுத்தையாவது, மொழியையாவது சந்தர்ப்பத்திற்கும் பொருளுக்கும் இயையுமாறு திருத்தத் துணிந்தேன். அவ்வாறு செய்யாவிடின், நூலின் சிறப்பு அழிவதுமின்றிச் சில பாடங்கள் ஒரு பயனுந்தராமல் சில முன்பின்னோடும் பிற நூல்களோடும் விரோதப்பட்டும் நிற்குமாதலிற்றிருத்தம் அத்தியாவசியமாயிற்று. இதனை உலகம் அறியச் சொல்லாமல் வருவதே தப்பென்று உணர்ந்து இங்ஙனம் தெரிவிக்கலாயினேன்.

பிரகடனாசிரியர்கள் நூலிலுள்ள தப்பு ஒப்பிற்கு உத்தரவாதிகளல்லரே! ஆசிரியர் பாடம் இஃதென்று நிச்சயித்து உணராவழி இருந்த வண்ணம் நூலை உலகிற்கு ஒப்பிக்கிறதுதானே! வீரசோழியம், தொல்காப்பியம் முதலியவைகளில் அப்படி ஒப்பிக்கவில்லையா என்போருளராயின், அன்னோர் மேல் வரும் நியாயங்களைச் சீர்தூக்கி என் செய்கையை மன்னித்தருள்வாராக.

முதலாவது அந்நூல்களில் பிரதிகளில் இருந்தபடி ஒப்பித்த வழுக்கள் மூல பாடத்தின் அர்த்தத்திலாவது உள்ளன அல்ல. மூலத்தில் அர்த்தத்திலும் வரும் வழுக்கள் ஒன்றாலொன்றன் பூர்வ சொரூபம் அறிந்து திருத்தப்படற்பாலனவாம். உரையாசிரியர்கள் பிற நூல்களிலிருந்து எடுத்துக்காட்டை உதாரணச் செய்யுளிலாவது மேற்கோள்களிலாவது புகுந்த வழுக்களே பிரதிகளில் கண்டபடி ஒப்பிக்கப்பட்டன. அவைகள் அவ்வவ் நூலாராய்ச்சியால் பிறர் அவ்வப்போது திருத்திக் கொள்ளக் கூடியன. இசை அவ்வாறுபின் எக்காலத்தும் திருத்தப்படா.

இரண்டாவது, உதாரணங்கள் மேற்கோள்களில் புகுந்திருக்கும் வழுக்கள் தாமும் ஆங்காங்கு எடுத்தோதிய பொருட்டுணிபிற்கு எம்மாத்திரம் வேண்டியதோ அதனுள் புகுத்த வழுவல்ல. எஞ்சிய பாகங்களில் ஏதாவது வழக்கிடத்தலாங் கற்போர் பெறக் கருதிய பயன் எவ்வாற்றானுஞ் சிதைவு படாது. உதாரணமாகச் "செய்யுளானும் முந்தாகலு முரித்தே" என்னும் இலக்கணமும் அதனுரையும் வழுப்படாமல் ஆராய்ந்து பதித்திருக்கிற அதற்கு இலக்கியமாகக் காட்டிய செய்யுள்கள் "தெண்டிரை மிசைப் பாயுந்து" "நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து" என்று பிரிந்தாலென்? "தெண்டிரை" என்றிருப்பினென்! "தண்டினர்" என்றிருப்பினென்? தெண்டிரையோ தண்டிரையோ என்பது" "நீர்" எதனைச் சேர்தல் சரி யென்பதும் அவ்விலக்கியங்கள் இருந்து எடுக்கப்பட்ட நூல்களாற்றிருந்த உணர்தல் பாலவாயினும் "பாயுந்து" "பெயர்க்குந்து" என வரும் விதியினை உணரும் உணர்த்தி அவ்வழுவாற்றொழிவல்லை யாதலானும் பாயுந்து என்னும் எச்சத்திற்கு முடியும் பெயர் வேண்டுமாதலானஞ் சிறிதா லோசனையால் "நீர்" முன்னாக்கியத்தோடு சேர்தற் பால தென்னும் புத்தி நுட்பக் குறைவால் ஏட்டுத் தொடரெழுத்தைப் பிரிக்க அறியாமல் வழுப்பட்டதென்னுஞ் சொல்வீராயின், அற்றன்று; அதற்கு அழைக்கும் பொருள்உண்டென்னும் நீர்க்கோழி தன்துணையைத் தன்னோடு செல்வான் அழைக்கும் பெயர்த்தல் இயல்லென்றும், பெயருந்து என்னாது பெயர்க்குந்து என்றதாற் றன்பெயர்க் கருதாது துணையைப் பெயர்தலைக் கொள்ளலுந் தகுமென்னும் "பாயுந்துநீர்" பெறச் சொல் சேர்ந்ததாயின் பெயர்க்குந்து யாண்டையோ முடிந்த தென்றும் விடுத்தொழிக.

இன்ன நூலிலிருந்து உதாரணம் எடுக்கப்பட்ட தென்று அறிந்து அந்நூலையும் தேடிப்

பார்த்தாலன்றி யதார்த்தரூபம் அறிதல் அசாத்தியமென்க. அவ்வாறு எட்டுத்தொகை பத்துப்பாடலென்றின்னோரன்ன சங்கத்தார் காலத்து நூல்களைத் தேடிப்பார்த்து அவற்றால் அறியத் தக்கன பின்னர்த் திருத்தற் பொருட்டாகவே தொல்காப்பியப் பொருளதிகாரத்து உதாரணச் செய்யுள்களில் சில பிழைகளைப் பிழையென்று நிச்சயமாயுணர்ந்தும் பிரதிகளில் கிடந்தபடி விட்டிருக்கின்றேன். நற்றிணையாகிய தொகைகளிலும் செய்து வைத்திருக்கிற திருத்தங்களுள் அநேகம் அப்பொழுது யான் இவை இன்னவாறு இருத்தல் வேண்டுமென்று உத்தேசித்தபடியே இருக்கின்றன. ஆயினும் பூருவசொரூபம் இதுதானெ நிச்சயமின்மையானும், ஒரு காலமில்லாதிருந்தால் வேறொரு காலத்தில் எப்படினும் பூருவசொரூபந் தேடி அறிதற்பாலவாயினமையானும் அவற்றை என் உத்தேசத்தின் பிரகாரம் திருத்தத் துணிந்திலேன்.

மூன்றாவது, உரை எழுதப்பட்டிராததோர் இலக்கிய நூலின் மூலபாடத்தில் சாஸ்திர முடியுங்கனக; பொருத்தமே அயனூலாராய்ச்சி கொண்டு துணிதற்பாலன. வாக்கிய முடிபு அங்ஙனமன்று. அது பலபல பிரதிரூபத்தின் சகாயத்தால் மாத்திரமே அறிதற்பாலது. நாடெங்கும் தேடினும் வேண்டிய அளவுக்குப் பிரதிகள் அகப்படாமல் வழுக்கள் நிறைந்து மாரண தசையும் அடைந்ததோர் உரையில்லா நூலை ஒன்றிற் பிரசுரம் செய்யாமல் இறந்துபோக விட்டுவிட வேண்டும். அன்றேல் கற்போர்க்குப் பயன்படத்திருத்தியே அச்சிடல் வேண்டும். இவ்விரண்டில் எது தக்கது? எலும்பழுகிய நாசிலைச் சத்திரம் பண்ணிப் பொன்னாச்சி பொருத்தினாற் போலப் பூர்வ சொரூபம் இறந்து பிறந்த இடத்தில் அஃதறிய வேறு வழியின்றேற் புதுத் திருத்தஞ்செய்வதை வழுவமைதியாக்கி மன்னிக்க.

நான்காவது, ஒரு திருத்தமும் செய்யாது பழம் பிரதிகளின்படி ஒப்பிப்பதால் வரும் பயன்யாது? வீரசோழியத்தில் சில சில இடங்களில் பிழைப் பட்டனவற்றை இருந்த வண்ணம் ஒப்பித்தேனன்றோ? யாவர் அவற்றுக்குப் பூர்வ சொரூபம் கொடுத்தால் தேடமுயன்றவராயினும் உளரோ? என்பு நொறுங்கிய காலை வெட்டியெறிந்து பொய்க்கால் வைத்தாற்போல அவற்றிற்குப் புத்துதாரணங்கள் செய்து சேர்த்திருப்பேனாயின் கற்போர்க்குச் சிறிதாவது பயன்படத்தக்கதாயிருக்குமே!

ஐந்தாவது சிற்சில இடங்களில் புதுத் திருத்தமானபின் இந்நூலைத் தோலாமொழித் தேவர் இயற்றியருளிய சூளாமணியெனல் பொய்படுமன்றோ வெனின், புதுமொழி சில சேர்த்தமையை உலகிற்குத் தெரியாது சொருகி வைத்தயாவும் ஆசிரியர் வாக்கென்று நடைபெற விடுவதே தவறானது. நன்னூற்குச் சங்கர நமச்சிவாயப் புலவர் இயற்றிய விருத்தியுரை யென்று இக்காலத்தான் கொள் அன்னோருரையில் அங்குமிங்கும் சிவஞான முனிவராற்றிருத்தப்பட்ட புத்தகம் புத்துரையன்றோ? முனிவர் திருத்தியமை உணர்ந்தோரால் அவராற்றிருத்தப்பட்ட விருத்தியுரையென்று அச்சுப் பிரதிகளின் நாமதேயப் பக்கத்தில் போட்டிருப்பது யான் அறிந்துளேன். ஊரில் வழங்குங் கையெழுத்துப் பிரதிகளைப் பார்த்து அதில் படித்தோரை இஃதியாவருரை யென்று கேட்டறிக. 1842ஆம் வருடம் யான் நன்னூல் விருத்தியுரை எழுதிப் படித்தபோது முனிவரால் அது திருத்தப்பட்டதென்று கேள்விப்பட்டதுமில்லை. ஸ்ரீலஸ்ரீ நாவலரவர்கள் அச்சிட்டபின் எல்லாருஞ் சொல்லுவர். இப்பொழுதும் அதில் புலவர் எழுதியதிது முனிவரன் திருத்தியதிது என்று பகுத்தறியக் கிடக்கின்றதா?

**நன்னூலுட் கருத்துலகோ ரறியவுரை செய்கவென**
**நரேந்திரசிங்கத்**
**தென்னூற்றுமலைமருதப்பன் புகலப், பொருள் விளங்கச்**
**செய்தான்பாரி**
**லெந்நூற்கு மெழுத்தொருசொற் பொருளறிசங்கரநமச்**
**சிவாயனென்னும்,**
**பன்னூற் செந்தமிழ்ப்புலவன் சைவசிகாமணி**
**நெல்லைப்பதியினானே**

என்பதுதான். வைத்தியநாத தேசிகர் செய்த இலக்கண விளக்கத்து அணியியலிற் சில சூத்திரங்கள் அவர் மகன் சதாசிவ தேசிகராற் சேர்க்கப்பட்டினவன்றோ! அதில் மைந்தனார் தந்தன இவையென யாவர் பிரித்துக்காட்டவல்லார்? ஆதலால் உலகறியச் சொல்வித் திருத்தல் தவறிலதாக, முழுத் தோட்டமும் அகத்தி நாட்டினும் வெற்றிலைத் தோட்டம் வெற்றிலைத் தோட்டமேயாமென்க.

அதாவது சுவடிகளில் பிழைப்பட்டிருக்கும் ரூபம் ஆசிரியரதன்று என்பது மலையிலக்கு. பின்னை எப்படியும் யான் பிரசுரம் செய்யத்தக்கது ஆசிரியர் செய்த ரூபமல்லாத போது பிழைப்பட்டு ஒருபொருளுந் தராமலாவது, விரோதப் பொருள் பயந்தாவது நிற்கும் ரூபத்தில் அவ்விரோத மில்லாதபடிக்கு யான் வைத்த ரூபந் தாழ்வுடைய தன்று.

ஏழாவது, ஆருகத நூலை இவ்வாறு திருத்துவது சமணர்க்கு வெறுப்பாயிராதோ வெனின், திருத்திய இடம் அனைத்திலும் சுவடிகளின் பாடமும் அவற்றின் கற்றலும் அவைகளில்யான் செய்த திருத்தமும் சைன வித்துவான்களில் சிறந்தோர் பலர்க்குக் காண்பித்து அன்னோர் முழுச் சம்மதியுடனேயே பதிப்பித்தேனென்றறிக.

இருந்தபடியே பதிப்பிப்பது நூலாசிரியரின் மகத்துவத்தை ஒரோவொரு இடத்தில் இழிவுபெறச் செய்யத் தக்கதாதலின் அதுவே அவர்க்கு வெறுப்பாயிருக்குமென்பது அவர்மேரு மந்தர புராணப் பதிப்பிற் காட்டும் அரோசிகத்தாற் தெளியலாம். மேலும் என் திருத்தங்களை அவர்கள் தங்கள் பிரதிகளிலுங் குறித்துக் கொண்டதே அவர்கள் சம்மதிக்குச் சான்றாகும்.

எட்டாவது, அப்படியாயின் இன்னாராற்றிருத்தப் பட்ட தென்று நாமதேய முகத்தில் போடுவது தானே யெனில் இலைமறைகாய்போல் எங்கேயோ ஒவ்வொரு மாறுபாடு செய்ததால் நூல் என்னாற்றிருத்தப்பட்டதாகாது. அல்லாமலும் ஆக்கியோன் மொழியினை யான் திருத்தினவனல்லன். பின் பக்க வழுவையன்றோ யான் திருத்தியது? மேலும் எனது திருத்தமே பூர்வ சொரூபமாக இருப்பினும் இருக்கலாமே. நூலைத் திருத்தியவனென்ற மேன்மைக்கு யான் அருகனல்லேன். இக்காரணங்களால் உலகமென்னை மன்னிக்குமென்று முற்றிலும் நம்புகிறேன். என் திருத்தங்கள் எப்படிப்பட்டனவென்று யாவரொருவர் அறிய விரும்புவராயின் அவர்க்கு அதனைத் தெரிவித்தல் என் கடன். தெரிந்து எடாது கைக்கு எதிர்க்கப்பட்டபடியே அவற்றில் சிலவற்றைக் குறிப்புப் பணி ஓர் அநுபந்தமாகச் சேர்த்திருக்கின்றனன்.

மேற்கண்ட பிரதிகளை வைத்துக் கொண்டு பரிசோதனை பண்ணுகையில் ஆருகத சமயக் கோட்பாடுகள், தத்துவப் பேதங்கள், புராணக் கதைகள் சிறப்புப் பெயர்களில் சில சமுசயங்கள் நேரிட்டன. அதற்காக வீடூர் வித்துவான் ஸ்ரீமான் அப்பாசாமி சாஸ்திரிகளை வரவழைத்து மூன்று மாதக்காலம் அவர்களைக் கூட வைத்திருந்து எனக்குள்ள சமுசயங்களைத் தீர்த்துக்

கொண்டதுமின்றி அவர்கள் போன பின்பு நிகழ்ந்தன சிலவற்றை அவ்வப்பொழுது அவர்களுக்குக் கடிதமெழுதித் தெரிந்து கொண்டேன். இன்னும் சந்தேகத் தீராத இடங்களால் இரண்டொன்று உண்டு. அவர்கள் இத்தனை தூரம் வந்திருந்து எனக்குச் செய்த உதவியை எப்பொழுதும் மறவேன்.

இந்நூலுணர்ச்சிக்கு உபயோகமான சமண கிரந்தங்களை எனக்குச் காண்பித்ததுமன்றித் தமது கையிலிருக்கும் ஏடுகளில் எப்பொழுதேனும் யாதாயினும் வேண்டுமாயின் அதனை உடனே அனுப்பி வைப்பதாகத் தயைபுரிந்த மன்னார்குடி ஸ்ரீ மு. அப்பாண்ட முதலியாருக்கும் சித்தாம்பூர் முதலிய இடங்களிலுள்ள சமணர் வசம் இருக்கும் நூல்கள் வேண்டிய காலங்களில் வாங்கி அனுப்புவதாக வாக்களித்த காஞ்சிபுரம் பச்சையப்பப் பாடசாலைத் தமிழ்ப்பண்டிதர் மகாமகாஸ்ரீ வ. கணபதிப் பிள்ளையவர்களுக்கும் என் வந்தனஞ் சொல்லுகின்றேன்.

இந்நூல் அருகத மகா புராணத்தில் கூறிய நவவாசு தேவப் பிரதிவாசுதேவர்களில் திப்பிரஸ்ட வாசுதேவனதும் அவ்வாசு தேவனுக்குப் பகையாய் அவதரித்த அயக்கிரீவப் பிரதிவசுதேவனுதுஞ் சரித்திரத்தை விரித்துக் கூறிய, பெரும் பாலுஞ்சமண காவியங்கள் துறவும் முத்தியும் உணர்த்தி மடியுமாறு போல், இருபத்து நாலு தீர்த்தங்களும் பிரேசய சுவாமி தீர்த்த காலத்திற் சுரமை நாட்டின்கண் போதனமா நகரத்திலிருந்து அரசு புரிந்த பயாபதி அரசன் தன் குமாரனான அவ்வாசு தேவனைப் பூமியாள வைத்துத் துறந்துதன் தேவிமாரோடு முக்தி பெற்ற கதையை எடுத்துச் சொல்லும்.

இந்நூற் சீயவதை நம் வித்தியாதர விவாகமும் சேடியர் சங்காரமும் கிருஷ்ண சரித்திரத்தில் சேர்ந்தன வரச்சாயினும் திவிட்டராசன்

குணாதியங்கள் திருமாலின் அவதாரமாகிய கண்ண பெருமானதும், திவிட்டனுக்கு மூத்தோனாகிய விசயன் குணாதிசயங்கள் கண்ணன் அவர் பலபத்திரனதும் இலவுணங்களோடு ஒருவாறு ஒத்திருக்கும்.

சீவக சிந்தாமணிச் சரித்திரத்தைச் சிந்தாமணிப் பதிப்பின் முதலில் ஸ்ரீமத் சாமிநாதையரவர்கள் சுருக்கிக் காட்டியது போல, இந்நூலை எளிதில் படித்து உணர்வதற்கு உபயோகமாக இதன் முதலிலும் திவிட்டன் கதையைப் பொழிப்பாகக் காட்டும்படி எனது இஷ்டர் சிலர் கேட்டுக் கொண்டனர். இக்கதையை வனைச ரூபமாக யாழ்ப்பாணம் வித்துவான் ஸ்ரீ அம்பிகைபாக உபாத்தியாயர் எழுதி வருவதால் அதன் சாரத்தை இவ்விடம் வேறாகப் பதிக்கல் அவசியமன்றென நிறுத்தினன். அன்றியும் இக்காலத்து உரையெழுதி அச்சிடுவிக்கக் கருதியிருப்பதாகவும் தெரிய வருகின்றது.

இக்கதையில் வரும் அரசராதியோர் பெயர் ஊர் சம்பந்தம் முதலிய அறிதல் கதைத் தொடர்ச்சியை லேசில் உணர்வதற்கு உபயோகமாகுதலின் அவற்றிற்கு ஓர் அகராதி சேர்த்திருக்கின்றேன்.

பிரதிகள் தேடிப் பரிசோதித்து இந்நூலைப் பதிப்பித்தற்கு உபயோகமான திரவியம் இரங்கூனிலிருக்கும் என்சகோதரன் செல்வச் சிரஞ்சீவி இளைய தம்பிப் பிள்ளை அவரது இஷ்டர் சிலரும் சேர்ந்து அனுப்பியதென்று முன் தெரிவித்தேன். அவர்களைப் போல்வார் பிறர்க்கும் இப்படிப்பட்ட விஷயத்தில் ஊக்கம் உண்டாதற் பொருட்டு அன்னோர் பெயர் விவரத்தை இவ்விடந் தருகின்றேன்.

## பணம் அனுப்பினோர் பெயர் வழி

| | ரூ. பை. |
|---|---|
| மகாமகாஸ்ரீ தி.எம். குட்டியாப்பிள்ளையவர்கள், ரங்கூன் கமிசேரியட் நொட்டிச்சாலை மானேஜர் | 100.00 |
| மகாமகாஸ்ரீ எ. சரவண முதலியாரவர்கள், ரங்கூன், கண்டமுறாலர் ஆபீசு, சூப்பரின்டெண்டன்ட் | 50.00 |
| மகாமகாஸ்ரீ வி. நமசிவாய பிள்ளையவர்கள் எம்.ஏ;பி.எல் கல்கத்தா ஹைகோர்ட் வக்கீல் ரங்கூன், றிக்கார்டக்ஸ் கோர்ட், அட்வக்கேட் | 50.00 |
| மகாமகாஸ்ரீ பா.குப்புசாமி முதலியராவர்கள், ரங்கூன் கமிசேரியட் மானேஜர் | 50.00 |
| மகாமகாஸ்ரீ தி.வி. கிருஷ்ணசாமி நாயுடு காரு, ரங்கூன், காண்டிராக்டர் | 50.00 |
| மகாமகாஸ்ரீ வேதாசல முதலியாரவர்கள், ரங்கூன் பர்மா ஸ்டேட். நேல்வே பொக்கிஷதாரர் | 50.00 |
| மகாமகாஸ்ரீ தி.எம். பொன்னுசாமிப்பிள்ளை அவர்கள், ரங்கூன் பேப்பர் கரென்ஸி ஆபீசு, பொக்கிஷதாரர் | 50.00 |
| மகாமகாஸ்ரீ சி.வை. இளையதம்பிப் பிள்ளையவர் ரங்கூன் டிப்டி கம்மிஷனர் ஆபீசுஹெட் அக்கவுண்டன் | 100.00 |
| ஆக. ரூ. | 500.00 |

இவர்கள் செய்த இவ்உபகாரத்தை யான் ஒருபோதும் மறவேன். இவர்கள் முன் மாதிரியைப் பின்பற்றி இன்னும் அநேகர் தத்தமக்கு ஏற்ற வித்துவான்களைக் கொண்டு பற்பல பழைய தமிழ் நூல்களை வெளிப்படுத்தி நிலை நிறுத்தக் கலைமகள் கடாட்சிப்பாளாக.

தொண்டமான் புதுக்கோட்டை<br>
விரோதிவருடம், கார்த்திகைமாதம்

சி.வை.தா.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
# சென்னை - 600 113
## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| Bibliography on Translations | 175.00 |
| சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | 60.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 200.00 |
| வா.கீ.ச. கலாநிதி கி.வா.ஜகந்நாதன் | 60.00 |
| நாசுதிராதிக்-ஞாலமுதன்மொழிஆய்வுகளுக்குப்பாவாணர் தரும் ஒளி | 35.00 |
| தமிழ்ச்சொற் பிறப்பாராய்ச்சி | 45.00 |
| மொழி பெயர்ப்பியல் | 45.00 |
| தமிழில் தத்துவ நூல்கள் | 40.00 |
| சி.வை. தாமோதரம்பிள்ளை | 40.00 |
| சொல்லிலக்கணக் கோட்பாடு தொல்காப்பியம் - முதல் பகுதி | 70.00 |
| இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | 40.00 |
| பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | 30.00 |
| மகளிர் முன்னேற்றத்தில் "அவள் விகடன்" இதழின் பங்களிப்பு | 35.00 |
| திருக்குறள் உரைச் சிந்தனைகள் | 50.00 |
| தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும் | 120.00 |
| மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் | 35.00 |
| A Course in Modern Standard Tamil | 65.00 |
| இசை மருத்துவம் | 45.00 |
| கம்பன் களஞ்சியம் | 280.00 |
| மொழியியல் நோக்கில் தொல்காப்பிய சங்க இலக்கிய ஆய்வுகள் | 40.00 |
| தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை | 250.00 |
| தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி | 225.00 |
| அரங்கேற்று காதை ஆராய்ச்சி | 140.00 |
| பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | 45.00 |
| இந்தியச் சூழலில்மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் கண்ணோட்டம் | 60.00 |
| பழந்தமிழ் அறிவியல் | 45.00 |
| நீறணி பவளக்குன்றம் | 35.00 |
| குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | 70.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-1 | 100.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் தொகுதி-2 | 100.00 |
| நீறணி பவளக் குன்றம் (ஒன்பதாம் திருமுறை ஆய்வுநூல்) | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்மூலம்-ஒருசமூகவியல் பார்வை | 30.00 |
| இந்தி நாடகப் பனுவல் (ஆடி மாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையாரின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் - ஓர் ஆய்வு | 40.00 |
| திருநாவுக்கரசரின் (அப்பர்) உவமை நலம் | 50.00 |

**Pub No. 654** ***சி.வை. தாமோதரம் பிள்ளை வாழ்வும் பணியும்*** **45.00**